# ஸ்ரீ ரமண வழி

(முதல்-இரண்டாம் பாகங்கள்)



இயற்றியவர்

ஸ்ரீ சாது ஓம்

ஸ்ரீ அருணாசலரமண நிலயம்

திருவண்ணாமலை

4976

R65(ரமண)

# ஸ்ரீ ரமண வழி

(முதல்-இரண்டாம் பாகங்கள்)

26-2



இயற்றியவர்

**ஸ்ரீ சாது ஓம்**

மூன்றும் பதிப்பு
(விரிவாக்கப் பட்டது)
1985

வெளியிட்டோர்

**ஸ்ரீ அருணசலரமண நிலையம்**

11-B, மணக்குள விநாயகர் தெரு,
ஸ்ரீ ரமண நகர், திருவண்ணமலை,
தமிழ் நாடு - 606 603.

உரிமை © : C. P. அருணாசலரமணன்

முதற் பதிப்பு (முதற் பாகம்) 1967
இரண்டாம் பதிப்பு (முதல்-இரண்டாம் பாகங்கள்) 1979
மூன்றும் பதிப்பு (விரிவாக்கப்பட்டது) 1985

# SRI RAMANA VAZHI

(*The Path of Sri Ramana*)

**PARTS ONE AND TWO**

*by SRI SADHU OM*

Third Edition (revised and enlarged) 1985

Published by SRI ARUNACHALARAMANA NILAYAM,
11-B, Manakkula Vinayakar Street, Sri Ramana Nagar,
Tiruvannamalai, Tamil Nadu – 606 603, India.

---

அச்சிட்டோர் : ராதா பிரஸ்,
திருவண்ணாமலை – 606 601 போன் : 2957.

4976
R65(5...)

# பொருளடக்கம்





இந் நூலாசிரிய ரியற்றிய இதர நூல்கள் :-

தமிழ் :—

சாதனை சாரம் (ஸ்ரீ ரமண வழி-மூன்றும் பாகம்)

உபதேச வுந்தியார் - விளக்கவுரை

குரு வாசகக் கோவை - உரை

ஸ்ரீ ரமண கீதம்

ஸ்ரீ ரமண வர்ணங்கள்

ஸ்ரீ அருணாசல வெண்பா

ஸ்ரீ ரமண குருவரு ளந்தாதி

ஸ்ரீ ரமணாக்ஷர மலர் மாலை

ஸ்ரீ ரமண சரிதச் சுருக்கம்

பகவத் கீதாசாரம் - உரை

English :—

The Path of Sri Ramana

A Summary of the Life and Teachings of Sri Ramana

இந் நூல்கள் கிடைக்குமிடம் :—

ஸ்ரீ அருணாசல ரமண நிலையம்,

11-B, மணக்குள விநாயகர் தெரு,

ஸ்ரீ ரமண நகர், திருவண்ணாமலை - 3,

தமிழ் நாடு - 606 603.

26-2

# நூன்முகம்

ஸ்ரீ ரமண வழி என்னும் இச் சீரிய நூல் பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள் உலகுக்குக் காட்டிய நேரிய ஆன்மீக மார்க்கத்தைத் தெளிவாக உணர்த்துவதாக அமைந்துள்ளது. அக்ஷரமண மாலை, உபதேச வுந்தியார், உள்ளது நாற்பது முதலிய ரமணோபதேசங்களுக்கு ஏற்கனவே வெளிவந்துள்ள உரைகளிற் சில பகவானது வாக்கியார்த்தத்தை உள்ளபடி பிரதிபலிக்காமல்—'த' என்னும் ஒரே மந்திராக்ஷரத்துக்குத் தேவர்-அரக்கர்-நரர் ஆகியோர் அவரவர் மனப் பான்மைக் கேற்ப வெவ்வேறு பொருள் கொண்டதாகக் கூறும் ஓர் உப நிடதக் கதையைப்போல—மாறுபடக் கூறியிருப்பதைக் கண்ட இந் நூலாசிரியர் அம் மாற்றுக் கருத்துக்களை தக்க ஆதாரத் துடன் கண்டித்து, தன் ஞானாசிரியரான பகவானுக்கு உடன் பாடான கருத்துக்களைப் புலப்படுத்தும் பெரு நோக்குடன் இந் நூலைப் படைக்க அரும்பாடு மேற்கொண்டுள்ளார். பிறர் உரைகளில் இவர் கண்ட மாற்றுப் பொருட்கு ஓரிரு உதா ரணங்கள் பிற்பால் 4(c), 4(d) ஆவன. எனவே, ஸ்ரீ ரமண போதம் பற்றிய இவ் வரிய ஆராய்ச்சி நூலானது ஆன்மார்த்த பொக்கிஷமாகவும், ஞானக் களஞ்சிய மாகவும், ஸ்ரீ ரமண போத ஸத்யார்த்த தீபிகையாகவும் உள்ளதால், பகவானது அருள் வாக்கின் அந்தரார்த்தங்களைக் கலப்பின்றி யுணர்ந்து உருப்பட வேண்டு மென்பதில் பேரார்வமுள்ள தலைமாணாக் கர்களின் மனோபீஷ்டத்தைப் பூரணமாக நிறைவேற்று மென் பதில் ஐய மில்லை. எங்ஙன மெனின், இந் நூலில் வரும் விளக்கங்களைப் பன்னாட்கள் தொடர்ந்து ஆசிரியர்பாற் சிரவ ணம் செய்துவந்து மனநிறைவுற்ற சில அன்பர்களே தாம மடைந்த அருள்பேற்றைப் பிறர்க்கும் பகிர்ந் தளிக்கும் நன் னோக்குடன் பெரும் பொருட் செலவில் இதனை அச்சியற்ற முற்பட்டதே அதற்குச் சான்றாகும். இதனாற் பயன்பெறும் நல்லன்பர்கள் பகவானது அருட் கொடையாக இதனைப் பக்தி விசுவாசத்துடன் போற்றுவ ரென்பது உறுதி.

தாம் காட்டி யருளிய நேரிய மெய்ஞ்ஞான மார்க்கத்தில், சென்ற சிலகாலமாகப் படர்ந்துள்ள போலிப் பொருட்களான காளான் களைக் களைந்து, சுத்தப் படுத்தத் திருவுளங் கூர்ந்து பகவானே இவ் வாசிரியரின் வாக்கில் நின்று இத் தெய்வ நூலைப் படைத் திருத்தல் கூடும் என்ற சில தூய பக்தர்களின் கருத்தை அறிஞ

ருலகம் ஏற்பது திண்ணம். "ஈசன் சில நல்லடியார் வாக்கில் நின்று மெய்யுபதேசங்கள் செய்கிருன்" என்று பகவானே ஓர்கால் கூறியுள்ளமையால், ஈசனுக்கு வேறில்லாத பகவான் ரமணர் தாமே தக்க தருணத்தில் தம் கூற்றை அம் முறையைப் பின்பற்றி ஏன் மெய்ப்பித் திருக்கக் கூடாது? பகவான் தோன்ருத் துணையாக உள்ளிருந்து தூண்டியிரா விடில், மற்றையோர் கருத்துக்களிலுள்ள பொருந்தா விளக்கங்களைச் செவ்வனே எடுத்துக் காட்டித் தக்க நியாயத்தாற் பகவானது கருத்துக்களை நிலை நாட்டும் தீரம் இவ் வாசிரியருக்கு ஏற்பட்டிராதன்ருே!

ஸ்ரீ பகவானது பக்தருலகம் இந் நூலாசிரியரின் மேற்கண்ட செயற்கரிய செயற்குப் பெரிதுங் கடமைப் பட்டுள்ளது.

(வெண்பா)

1. நேதிகளை வாற்கண்டு நில்லென்ற சீரமணன்
போதனையைப் போற்றப் புகன்ருருநூல்—சாதுஒம்
பார்க்குரம ணுற்றுப் படையா வழங்கியெல்
லார்க்கும் வழிகாட்டி னுன்.

2. இந்நூல் ரமணவழி யீதுநடு வாய்நின்று
தொன்னூல் வழியையெலாஞ் சோதித்துத்—தன்னைத்தான்
ஓர்வழிவிட் டோர்வரிதென் ருேர்ந்து முமுட்சுவையந்
நேர்வழியி னிற்பிப்ப தாம்.

3. சும்மா விருப்பே சுகவழியா மென்றநம
தம்மான் வழியகன் ருற்றும்பல்—கன்மாக்கள்
வாதனைக்கு வித்தென்று வாதித்துத் தற்கவன
போதனைசெய் விந்நூற் பொருள்.

4. இந்தநூற் ருேன்றற் கிதுவே முகாந்தரம்வே
றெந்தவுண் ணுேக்கு மிதற்கின்று—சொந்த
விருப்புவெறுப் பின்றி விளம்புமிதைப் பார்ப்பா
ருருப்படுவர் தம்மெய் யுணர்ந்து.

5. சோதனைக ளற்றான் ருெடர்வற்றுப் பல்யோக
சாதனைக ளற்றீறில் சங்கையற்றுப்—போதச்
சுமையற்றுச் சும்மா சுபாவத்தெஞ் ஞான்று
மமைவே ரமணவழி யாம்.

6. குருவா சகநூ லெனவுண்மை யைக்கோண்
மருவா ரமணவழி நூலு—முரைசெயலான்
முன்னூலோற் கன்றைய னீந்த முதன்மையைப்
பின்னூலோ னும்பெறுவ னின்று*.

7. சீரமண மெய்வழிநூல் செப்பும் பரஞானப்
பேருரைகொள் ளுஞ்செவிகள் பின்னர்வேற்—றுருரையுங்
கொள்ளுமோ? கோவாக்கின் ‡கூடார்த்த சாரமெலாம்
விள்ளலா லிந்நூல் விரித்து.

அருணாசல ரமணன் அருளடி வாழ்க.

ஸ்ரீ நடனானந்த சுவாமிகள்,
திருவருணை.

---

*குறிப்பு : "குருவாசகக் கோவை வெளிவந்த போதே அதன் ஆசிரியர் முன்னனித் தொண்டர் வரிசையிற் சேர்ந்து விட்டார்" என்று அன்று கூறிய பகவான் இன்று ஜீவ தசையிலிருந்தால் ரமண வழியார்க்கும் அப் பரிசை வழங்குவாரென்பர் நல்லோர்.

‡ கூடார்த்தம்—இரகசியப் பொருள்.

ஓம் நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# முன்னுரை

உள்ள பொருளாம் உள்ளத்தை உள்ளலாவது உள்ளபடி உள்ளமாய் உள்ளதே என்று உலகத்தா ருய்ய நேர்வழி காட்டி யருளியவர் உள்ளலற உள்ளத்தே உள்ளவரான பகவான் ஸ்ரீ ரமண மகரிஷிகளே யாவர். அத்துவித சித்தாந்தம் வலியுறுத்தும் 'முக்தி' என்பது செத்தபின் சிவலோகம் சேர்தலோ வைகுண்டம் புகுதலோ அல்ல; அது, இப்பொழுதே இங்கேயே நம் இயல்புநிலையான ஆனந்த, பரிபூரண இருப்புணர்வில் திளைத்தலே என்பதும், அதை அடைவதற்கு 'நான்' என்னும் சொல்லின் உண்மைப் பொருள் எது—'நான் யார்?' —என்ற விசாரணையில்தான் ஈடுபட வேண்டும் என்பதும் பகவான் ஸ்ரீ ரமணரின் நேருபதேச மாகும். ஆயினும் ஆன்ம விசாரத்தின் செய்முறை என்ன வென்பதைச் சரிவர அறியாததால் பலர்தம் முயற்சியும் வீணாவதால், அதைத் தவிர்க்கும் வழியையும், ஆன்ம விசாரம் எவ்வா றியற்ற வேண்டும் என்னும் சரியான வழியையும் இந் நூல் மிகத் தெளிவாக விளக்குகின்றது.

1950ஆம் ஆண்டில் பகவான் ஸ்ரீ ரமணரது திருமேனி மறைவுக்குப்பின், ஆன்ம ஞான தாகங்கொண்டவர்களாய், ஸ்ரீ பகவானது உபதேசங்களை ஐயந்திரிபறச் செவ்வனே அறிந்துகொள்ளும் நோக்கத்துடன் அருணாசலரமண சந்நிதிக்கு வந்த அன்பர்கள் பலராவர். பாரதத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து மட்டுமன்றி உலகின் எல்லா நாடுகளிலிருந்தும் வந்த உண்மை முமுக்ஷுக்களான பலரும் அதில் அடங்குவர். அத்தகையோருள் ஸ்ரீ ரமணோபதேசங்களை ஆங்கிலம் போன்ற பிறமொழிபெயர்ப்பினின் றல்லாமல், ஸ்ரீ பகவானருளிய தமிழ் மூலத்தினின்றும் நேரே அறிந்துகொள்ள விரும்பிச் சிலர் இந் நூலாசிரியரான ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகளைச் சந்தித்து தமது ஆன்ம சாதனையில் உதவக் கூடியதும், ஸ்ரீ பகவானது உபதேசங்களை அனுஷ்டிக்க மிகவும் சகாயமானதுமான— அனுபவ சாத்தியமான—அப்பியாச முறைகளைப் பற்றிப் பல்வேறு கோணங்களினின்றும் அநேக வினாக்களை எழுப்பி வந்தனர். அவ் வினாக்களுக்கெல்லாம் பிற சாத்திரங்களின் மேற்கோள் உதவியின்றி ஸ்ரீ ரமணோபதேசங்களைக் கொண்டே விளக்கி, சம்பாஷணை முறையிலேயே விடையளித்து, அவ் வன்

26-2

பர்களின் சந்தேக விபரீதங்களை யெல்லாம் ஸ்ரீ ஸ்வாமிகள் நீக்கி வந்தனர். அவ் விடைகளை யெல்லாம் அவ்வப்போதே குறிப் பெடுத்துச் சென்றவர் பலர்; இந் நூலாசிரியரிடமிருந்து விடையாகக் கிடைக்கப்பெற்ற செய்யுட்கள் பலவற்றை எழுதிச் சென்றவர்களும் உண்டு; மேலும் தத்தம் ஊர்களிருந்து சந்தேகங்களைக் கடிதமூலம் இந் நூலாசிரியருக்கு எழுதி அற்புதமான விடைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பெற்றிருந்தவர்களும் பல ராவர்; இவ்வாறே பதினேழு வருடங்கள் (1950-1967) நடந்து வந்தது. பின் 1967ல் டாக்டர் R. சந்தானம் என்னும் அன்ப ரொருவர் பெரு முயற்சி எடுத்து, இப் பதினேழாண்டுகளில் ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகள் மூலம் பல அன்பர்கள் சேமித்து வைத்திருந்த விடைகளாகிய ரமணோபதேச விளக்கங்களை யெல்லாம் சேகரித்துத் திரட்டி ஸ்ரீ ஸ்வாமிகளிடமே கொண்டுவந்து, "இவைகளைக் கருத்தொழுங்கு பெறத் தொகுத்துத்தர வேண்டும்; அதை ஓர் நூலாக்கி வெளியிட விரும்புகிறேன்" என்று கூறினர். "தங்களுக்கு ஏன் இவ்வாறு புத்தகம் வெளியிடும் நோக்கம் எழுந்தது? இவைகளெல்லாம் யாரோ சிலருக்கு அவ்வச் சமய அவசியத்திற்காகக் கூறப்பட்ட விடைகள் தானே" என்று ஸ்ரீ ஸ்வாமிகள் கேட்கவே, டாக்டர் சந்தானம், "தங்களைப் பற்றி திரு C. P. நாதன்* வெகு காலமாகக் கொண்டிருந்த அபிப்பிராயம் இது! 'ஸ்வாமிகளது எழுத்தும் சொல்லும் எவ்வளவு விலையுயர்ந்த செல்வங்கள் என்பது எனக்குத் தெரியும்; அவைகளை வீண் போக விடாதீர்கள்' என்று என்னிடம் அவர் பல முறை கூறியுள்ளார். அதனால் எனது இம் முயற்சிக்கு உதவுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். ஆனால் இவை யெல்லாம் ஓர்

*திரு C. பழமலை நாதன் என்ற இவ் வுத்தம ரமண பக்தரே முதன் முதலில் ஸ்ரீ சாது ஓம் சாமிகளின் அருமை யறிந்து, அவரது எங்கும் சுற்றித் திரியும் பரிவிராஜகப் போக்கைத் தடுத்து ஸ்ரீ ரமண நகரில் தனது வாசஸ்தலத்திலேயே ஓர் இருப்பிடம் அமைத்துக் கொடுத்து உபசரித்தவர் இவரது முயற்சியினாலேயே ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகளையும், ஸ்ரீ ரமண பக்தருட் சிறந்தவரும் "ஸ்ரீ திண்ணை ஸ்வாமிகள்" என்று அன்பர் பலராலும் அன்புடன் போற்றப்படுபவருமான மகாத்மாவையும் திரு C. பழமலை நாதன் அவர்களது இல்லத்திலேயே—ஒரே இடத்திலே இருவரும் எப்போதும் தங்கி யிருக்கப் பெற்று—நாமெல்லாம் சென்று கண்டு அளவளாவும் பேறு கிடைத்தது எனலாம்.

நூல் வடிவாகும் என்று அதுவரை ஸ்ரீ ஸ்வாமிகள் கருதியதே யில்லை!

பக்தி, ஞானம், விசாரம், யோகம், கர்மம், உலகம், கடவுள், ஜீவன், பிறவி, மரணம், மோக்ஷம் முதலிய பற்பல விஷயங்களையும் பற்றி, பல்வேறு காலங்களில், பலதரப்பட்ட மனநிலை யுடைய அன்பர்கள் பலருக்கும் கூறிய அவ் விடைகள் யாவற்றையும் கதம்பமாக ஒரு நூலாக்குவது பொருத்தமற்றதாகவும், சிரம சாத்தியமானதாகவும் உள்ளதாக ஸ்ரீ ஸ்வாமிகள் கருதினர். அதனால் அவற்றுள் பலவற்றை ஒதுக்கி விட்டு ஸ்ரீ பகவானது நேர் மார்க்கமான 'நான் யார்?' என்னும் ஆன்ம விசாரம் ஒன்றைச் சம்பந்தித்த விடைகளை மட்டுமே தேர்ந்து, கருத்துத் தொடர்ச்சி பொருந்துமாறு தொகுத்துத் தரவே, அப் பகுதியே 1967ல் டாக்டர் R. சந்தானம் அவர்களால் 'ஸ்ரீ ரமண வழி-முதற் பாக'மாகத் தமிழில் பிரசுரிக்கப்பட்டு வெளிவந்தது.

இந் நூலைக் கண்ணுற்றபின், சிறந்த ரமண பக்தருள் ஒருவரும், முன்னாள் சென்னை உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதியுமான ஸ்ரீமான் M. அனந்தநாராயணன் அவர்கள், "ஸ்ரீ ரமண வழி என்னும் இந் நூல் பகவான் ஸ்ரீ ரமணரது முக்கியோபதேசங்களை ஆழ்ந்து ஆராய்ந்து மிகத் தெளிவாக விளக்குவதா யுள்ளது. தனது ஆன்மாபரோக்ஷ அநுபூதியையே அடிப்படையாகக் கொண்டு ஸ்ரீ பகவான் எப்போதும் வலியுறுத்திப் போதித்துவந்த ஆன்ம விசார மார்க்கத்தையே தீவிரமாகப் பின்பற்றி முயன்று பயின்றுவரும் சாதகர்களுக்கு இந் நூல் போற்றத் தக்கதோர் பொக்கிஷ மாகும். ஸ்ரீ பகவானருளிய 'நான் யார்?' என்னும் நூலை மேலெழுந்த வாரியாகப் படித்துச் செல்லும் பலரது கவனத்திற்கும் வெகு சுலபமாகத் தவறிப் போகின்ற சில நுட்பமான உயர்ந்த கருத்துக்கள் இந் நூலில் நன்கு எடுத்துக் காட்டப்பட்டிருப்பதைக் காண மிக்க மகிழ்வடைகின்றேன். தற்காலம் உலகெங்கிலுமுள்ள ரமண பக்தர்கள் பலரும் இந் நூலைப் பெரிதும் பாராட்டி வரவேற்பர் என்பதில் ஐய மில்லை. அவர்களுட் பலர் மேனாட்டவரா யிருப்பதால் இந் நூல் ஆங்கிலத்திலும் வெளி வர வேண்டியது மிக்க அவசிய மாகும்" என்று டாக்டர் R. சந்தானம் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதி இந் நூலின்

ஆங்கில மொழிபெயர்ப்பின் அவசியத்தைத் தூண்டினர். அதனால் ஸ்ரீ ரமணவழி 'The Path of Sri Ramana' என்ற பெயருடன் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுப் பிரசுரமாயிற்று.

இவ் விரு மொழிகளிலும் ஸ்ரீ ரமண வழி உலகின் பல பாகங்களிலும் உள்ள ரமண பக்தர்களிடம் பரவவே, அவர்களுட் சிலர், "ஸ்ரீ ரமண பகவான் சிறந்த அருணாசல பக்த சிகாமணியாயிற்றே; உண்மையான பக்தியின் நுட்பங்களையெல்லாம் என்பு நெக்குநெக்குருகப் பாடி யருளி, பல அமயங்களிலும் அன்பர்களுக்குப் பக்திச் சுவை யமுதைப் பரிமாறிய அருள் வள்ளலன்றோ? மேலும் அவர் உலகம்-உயிர்-இறை இவற்றின் மெய் யியல்பு இன்னது தான் என்பதையும் விளக்கமாக உபதேசித்த ஞானப்பிழம் பன்றோ? அப்படி யிருக்க, ஸ்ரீ ரமண வழியோ (அதாவது இந் நூலின் முதற் பாகமோ) 'நான் யார்?' என்னும் விசார நேர் மார்க்கம் ஒன்றையே பற்றிக் கொண்டு, நம்மை முடிவான பரமான்ம நிலை வரை இட்டுச் செல்வதாயிருப்பினும், இறைவன்-உலகம்-சிருஷ்டி-கர்மம்-பக்தி ஆகியவற்றைப் பற்றிய ரமண கருத்துக்களுள் யாதொன்றுமே இடம் பெறாமல் முடிந்திருக் கின்றதே!" என்று இந் நூலாசிரியரிடம் வினவவே, முன்பே அச்சுக்குத் தராமல் ஒதுக்கி வைக்கப்பட்ட விடைக் குறிப்புக்கள் பலவற்றையும் ஸ்ரீ ஸ்வாமிகள் மீண்டும் திரட்டி 'ஸ்ரீ ரமணவழி—இரண்டாம் பாக'மாகத் தொகுத்துத் தந்தனர். அதனால், 1979ல் மலேசியாவிலுள்ள ஸ்ரீ ரமண சன்மார்க்க சங்கத்தார் இதன் இரண்டாம் பதிப்பை வெளியிடும் போது ஸ்ரீ ரமண வழியின் இரு பாகங்களையும் ஒரே புத்தமாகத் தொகுத்ததோடு, ஸ்ரீ ரமண பகவானது சரித்திரச் சுருக்கம் ஒன்றையும் இந் நூலின் முதலிற் சேர்த்து 'ஸ்ரீ ரமண வழி (இரு பாகங்களும்)' என்ற பெயருடன் இரண்டாம் பதிப்பாக வெளியிட்டனர். இவ் விரு பாகங்களும் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்த பிறகு வாசகர்கள் பலர் இந் நூலின் பல விஷயங்களைப் பற்றி இந் நூலாசிரியரிடம் மேலும் பல விளக்கங்களைக் கேட்கவே, இம் மூன்றும் பதிப்பில் நூல் முழுவதிலுமே பல விளக்கங்கள் இந் நூலாசிரியராற் சேர்க்கப்பட்டு இப்போது வெளிவந்துள்ளது.

ஸ்ரீ ரமண பக்தர்கள் பலர் பற்பல சமயங்களிலும் வினவிய பல வினாக்களுக்கும் இந் நூலாசிரியர் விடைகளாக

எழுதித் தந்த செய்யுள்களும் பாடல்களும் 'சாதனை சாரம்' என்ற தலைப்பில் ஸ்ரீ ரமண வழியிற் சேரத் தகுதி பெற்றிருந்த தால், அன்பர் பலர் அவற்றையும் தொகுத்துத் தரும்படிக் கேட் டுக் கொள்ளவே அவை அவ்வாறே தொகுக்கப் பெற்று (பாடல் களுக்கு உரையுடன்) 'ஸ்ரீ ரமண வழி-மூன்றும் பாகம்-சாதனை சாரம்' என்ற தலைப்புடன் ஒரு தனி நூலாக 1983ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

இப்போது ஸ்ரீ ரமண வழியின் மூன்று பாகங்களும் மேற்கூறிய விதத்தில் வெளிவந்து விட்டாலும், ஒன்றை நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது இந் நூலாசிரியரின் நோக் கமும் போக்கும் ஏனைய வேதாந்த அல்லது ஆன்மிக நூல் களை எழுதும் எழுத்தாளர்களின் போக்கிற்கு (அதாவது தாமா கவே முன்வந்து தமது கருத்துக்களை உலகத்தாருடன் பகிர்ந்து கொள்ள விரும்பிப் புத்தகங்களை எழுதும் எழுத்தாளர்களின் போக்கிற்கு) முற்றிலும் மாறுபட்டது என்பதை நாம் இங்கு நம் கவனத்திற் கொள்ள வேண்டும். 'தட்டினு லன்றித் திறக் கப்படாது' என்ற தன்னடக்கச் சுபாவமுடைய ஸ்ரீ ஸ்வாமி களிடமிருந்து நாம் உண்மையான வேட்கையோடு கேட்டாலன்றி யாதொரு விஷயமும் பெற முடிவதில்லை. உலகத்தாருக்கு உபதேசிக்கக் கிளம்புவதோ, மேடைக ளில் ஏறி உபந்நியாசங்கள் செய்வதோ, உலகத்துக்கு நூல் களை எழுதிக் குவிப்பதோ, ஆசிரமங்கள்-மடங்கள் ஏற்படுத் துவதோ, பத்திரிகை எழுதிக் கொள்கைகளைப் பரப்புவதோ, இவை யாவற்றையும் ஸ்வாமிகள் அடியோடு விலக்கி வந்தார்! இது பகவான் ரமணர் வாழ்ந்து காட்டிய வழியே. ஸ்ரீ ஸ்வா மிகள் அடிக்கடி, "உலகத்தை நோக்கக் கூடாது; உள்ளத்தை நோக்க வேண்டும். உலகை நோக்கி ஓடும் சந்நியாசிகளுக்கு உலகமும் கிடைப்பதில்லை; உள்ளமும் கிடைப்பதில்லை! நிழ லைப் பிடிக்க விரைந்தால் அது கிட்டாது. சூரியனை நோக்கி விரைந்தால் நிழல் நம் பின்னேயே ஓடி வரும். உபதேசித்து உல கத்தை உயர்த்தப் போகிறேன் என்று உலக மக்களையே நாடி நிற்கும் சந்நியாசிகள் முடிவில் வீணுகின்றனர்...இது வரையில் உலகில் தோன்றிய எந்த ஞானியும் எந்த ஒரு ஆசிரமத்திலோ -மடத்திலோ பயிற்சி பெற்று உண்டானவர்களல்லர். தனியே நின்று தத்துவ முணர்ந்தவர்களே. மத நிறுவனங்களிற் சேர்ந்துதான் மனிதன் ஞான மடைய வேண்டும் என்ற

நியதி யில்லை. உலக சேவை என்ற பெயரால் கூட்டம், கோஷம், மடம், பத்திரிகை, பிரசங்கம் என்றெல்லாம் தன்னைத் தானே ஏமாற்றித் தன் முன்னேற்றத்தைத் தானே தடுத்துக் கொள்ள வேண்டாம்" என்றே கூறுவதுண்டு.

ஒருமுறை மேனாட்டிலிருந்து, "தாங்கள் மேனாட்டிற்கு (U.S.A.க்கு) வந்து எங்களுக் கெல்லாம் வழிகாட்டக்கூடாதா?" என்று ஓர் அழைப்பு ஸ்வாமிகளுக்கு வந்தது. அதற்கு அவர் எழுதிய விடை அவரது உள்ளப் பாங்கைத் தெற்றெனக் காட்டுவதாகும். அது வருமாறு: "...எனவே நான் உலகை நோக்கி ஓட வேண்டியதில்லை. மேலும், அரசியல் வாதிகள், சமூக சீர்த்திருத்தக்காரர்கள், மேடை மேடையாக வேதாந்த வாள் வீசும் பிரசங்க வீரர்கள் ஆகிய இவர்களை யெல்லாம் விட, மெய்யான ஆன்மீக வாழ்வில் அடக்கமாக வாழ்ந்து, வெளியுலகிற்குச் சிறிதும் தெரியாமலேயே யிருந்து மறைந்து போகும் உத்தம மனிதன் ஒருவன் உலகிற்கு உண்மையி லேயே அளவற்ற நன்மையைச் செய்து விடுகிறான் என்பது ஸ்ரீ ரமண பகவான் கண்ட பேருண்மை யாகும். மெய் யுணர்வு பெற்ற ஒருவனது வாழ்வு, உலகில் எந் நாட்டின் மூலை முடுக் குகளில் வாழும் உத்தம சாதகர்கட்கும், உடற் சந்திப்போ, கடி தப் போக்கு வரத்தோ, பத்திரிகையாதி எழுத்துத் தொடர்போ கூட இல்லாமல் அவர்களது ஞான விழிப்புக்குத் தாமாகவே பயன்படுவது உறுதி. இதுவே ஸ்ரீ ரமண பகவான் உரைகடந்த பெரு வலியாகிய பரமோனத்தால் உலகிற்கு அறிவு புகட்டிவந்த நெறியாகும். அவரது அடிச் சுவட்டைப் பின் பற்ற விரும்பும் நாம் அந் நெறி நிற்க வேண்டாமா? ......ஆகவே நான் எங்கு செல்ல நினைக்க வேண்டும்? ஏன் செல்ல வேண் டும்? தன் மெய் வீட்டிற்கு என்னை நடத்திவந்த என் ஞானத் தந்தையும் சகல வுயிர்களின் இறைவனும் ஆத்ம சொரூபமு மான ஸ்ரீ பகவானுக்கு உண்மையான ஏனைய சாதகர்களையும் நடத்திச் செல்லத் தெரியாதா? 'நான் இவர்களுக்கு வழி காட்ட வேண்டும்' என்ற ரூபத்திலாவது ஓர் அகந்தை ஏன் எழ வேண்டும்? அவ்வாறு ஓர் நான் எழுந்தால் அது ஏகனா கிய இறைவன் ரமணன் அருளுக்கு இழுக்கைத் தேடிவைக் கும் இறுமாப்புச் செயலன்றோ? எனவே மேனாட்டுக்கோ கீழ் நாட்டுக்கோ, இங்கோ அங்கோ எங்கோ செல்லும் எண்ண மெல்லாம் எனக்கு எழுவதே யில்லை; எழப் போவது மில்லை!"

இவ்வாற்ருல் ஸ்ரீ பகவான் ரமணரைப் பின்பற்ற விரும்புவோர் தம் வாழ்வின் நோக்கத்தை எப்படி அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்கு இந் நூலாசிரியர் ஓர் எடுத்துக் காட்டாக விளங்கினர். தன் மறுப்பு அல்லது அகந்தை யடக்கத்தின் காரணத்தால் இவர் இந் நூலின் தமிழ், ஆங்கில வெளியீடுகள் யாதொன்றிலும் சிரத்தை யற்றவராகவே இருந்து வந்தார். இக் கருத்துக்க ளெல்லாம் 'ஸ்ரீ ரமண வழி' என்ற ஒரு நூல் ஆகப்போவதை அவர் எதிர் பார்த்ததே யில்லை. **எந்த நூலும் எழுத வேண்டும் என்ற சங்கற்பமும் அவருக்கிருந்ததில்லை. இந்த நூலும் அவரது அத்தகைய சங்கற்பத்தால் எழுதப்பட்டு உண்டானது மில்லை!**

> "தேசத் தவர்க்குப தேசிக் கவல்ல, திரண்டநிதி
> நேசித் துமல்ல 'நிருவிகற் பத்தி னிலைத்தமகான்
> பூசிக் க'வென்னும் புகழுக் குமல்ல புலையகந்தை
> நாசத்திற் குன்னரு ளுடுகின் றேனருள் நாயகனே."
>
> — ஸ்ரீ ரமண குருவரு ளந்தாதி-68

என்பது ஸ்ரீ பகவானிடம் இந் நூலாசிரியர் செய்த பிரார்த்தனை யாகும்.

ஆன்மீக விஷயங்களைப் பற்றி அன்பர்கள் ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகளிடம் வினக்களை எழுப்பும் போது, தம் மனப் போக்கை விளக்கும் வகையில் அவர் சில சமயம் கூறுவதாவது : "நீங்கள் என்னைக் கேட்பதால் நான் ஸ்ரீ பகவானது உபதேசங்களை யொட்டியே விடை கூற முடியும். உங்கள் மனத் திருப்திக்கு ஏற்ற முறையில் நான் பதில் கூறுவேன் என்று எதிர்பார்க்க வேண்டாம். ஸ்ரீ பகவானிடம் நான் என்ன அறிந்து கொண்டேனே அதைப் பொருத்து அப்படியே தான் நான் விடை கூற முடியும். ஸ்ரீ பகவானது ஆன்ம விசார மார்க்கத்தைத் தவிர மற்ற மார்க்கங்களைப் பற்றி நீங்கள் கேட்டாலும், ஸ்ரீ ரமண சித்தாந்தத்தின் அடிப்படையில் தான் நான் ஏனைய மார்க்கங்களையும் பற்றி விளக்கம் தருவேன். ஸ்ரீ ரமணோபதேசங்கள் மட்டுமே எனக்கு அதிகார பூர்வமான சாஸ்திரங்களாகும். உலகம் என் விடைகளை ஏற்க மறுத்தால் பரவாயில்லை. உலகம் என் கருத்துக்களை தூர எறிந்து விடட்டும்." ஸ்ரீ ஸ்வாமிகள் தன் கருத்துக்களைப் பற்றி யார் எது நினைத்தாலும்—உலகம் அதை மதிக்கா விட்டாலும்—அதைப்

பற்றிக் கவலைப்படுவதே யில்லை! தற்போது அவர் பெயரால் வெளிவந்துள்ள இந் நூல்களைப் பற்றியும் அவர் ஒருமுறை, "என்னைக் கேட்டவர்களுக்காக ஏதோ எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன். அவர்கள் இக் கருத்துக்களைப் புத்தக வாயிலாக மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வதை நான் தடுக்க வில்லை. ஆனால் உலகத்திற்கு நூல் எழுதுவதற்காக நான் வரவில்லை. நான் ஒரு எழுத்தாளனுமல்ல. எழுத்தாளன் ஆவது என் இஷ்டமு மல்ல. இக் கருத்துக்களை உலகம் 'தனக்கு வேண் டும்' என்று விரும்புமாயின் அவற்றை அச்சிடுவதோ, பகிர்ந்து கொள்வதோ அதன் பொறுப்பு" என்று ஸ்ரீ ஸ்வாமிகள் கூறி னார். எனவே, இந் நூலானது, ஸ்ரீ பகவானது தெளிவான, நேர் மார்க்கத்திலிருந்து சிறிதும் விட்டுக் கொடுத்து விலகாத ஸ்ரீ ஸ்வாமிகளின் போக்கை விரும்புவோரால், அவ்விதம் விரும் புவோர்க்கு மட்டுமே பயன்படுவதாய் வெளியிடப்படுகிறது!

இந் நூலாசிரியரான ஸ்ரீ சாது ஓம் தமிழகத்தில் தமிழின் சிறப்பு தலைசிறந்து விளங்கும் தஞ்சை நகரைச் சேர்ந்தவர். அவர் துன்மதி வருஷம் மார்கழி மாதம் 29ஆம் தேதி (1922ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 12ஆம் தேதி), பூர்வ பக்ஷம், சதுர்த்தசி திதி, வியாழக்கிழமை, புனித திருவாதிரை நாளன்று இரவு 9-30 மணிக்கு ஜனித்தார். பாலப் பருவத் திலேயே பரம னருளை நாடி நின்றதால் தமது பதினான்கு வயதிலேயே திருவருளால் உள்ளத்திற் கவியூற்று திறக்கப் பெற்ற பாலகவி! சிறு வயதிலேயே பகவான் ஸ்ரீ ரமணரை சற் குருவாக வந்தடைந்ததும் பகவானது மோனவருட் சந்நிதி மகிமையாலும், இடையிடையே பகவான் ரமணரே இவரது தமிழ்க் கவித்துவத்திற்குச் சிறப்பூட்டும் இலக்கண நுணுக் கங்களைத் திருவாய் மலர்ந்து போதித்து வந்ததாலும், ஸ்ரீ பக வானது உத்தமோத்தம பக்த சிரேஷ்டரும் சீரிய செந்தமிழ்ப் புலவருமான ஸ்ரீ முருகனாருடன் நெடுங்காலம் தமிழிலக்கியத் தொடர்பு கொண்டிருந்ததாலும், இவரது கவித்திறன் முழு மலர்ச்சி பெற்றோங்கியது.

" நரத்துதியே பாடுந்தன் னுப்புன்மை யெண்ணிக்
கருத்தறவே மாழ்கிக் கரைந்து—பரத்திறமே
பாடுவேன் ஊத்தைநரம் பாடேன்மற் றென்றுறுதிப்
பீடுபெற வாழ்க கவி." — குருவாசகக் கோவை-138

"ஆண்டா னருளா லடைந்தகவி வாணியையவ்
வாண்டா னடிக்குரிமை யாக்காது—தீண்டா
நரத்தைப் புகழ்வார்தந் நாமகளே யந்தோ
பரத்தைத் தொழிற்படுப் பார்."—குருவாசகக் கோவை-139

என்றபடி, தம் கவிவாணியைத் தம் சற்குரு ரமணரின் அருள் மகிமையைப் புகழ்ந்து பாடுவதிலும், சற்குருவின் உபதேசங்களையே விளக்கும் கருத்துப் பாடல்களாக அதை வார்ப்பதிலும் மட்டுமே பிரயோகித்து நம் ஸ்வாமிகள் "பொய்ம்மையாளரைப் பாடாதே யெந்தைப் புகலூர் பாடுமின் புலவீர்காள்..." என்ற ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அருள் வாக்கிற்கு இலக்கியமாக நிற்பவரானுர். நரத்துதியோ நாட்டுத் துதியோ அவரது நாவில் இடம் பெற்ற தில்லை! தேசாபிமானம், பாஷாபி மானம், லோகாபி மானம் எல்லாம் அசத்திய தேகாபிமானத்தையே மூலமாய்க் கொண்டு முளைத்திருப்பதால், தேகாபிமானமாம் அகந்தையை வேரறுக்குந் திருவருளை வேண்டித் துதிக்கும் வரத் துதியையே அவரது வாய் வற்ருது வார்த்து நிரப்பியது! இவ்வாறு பகவான் ரமணரைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகள் இதுகாறும் இனிய எளிய செந்தமிழ் நடையில் பொருட் செறிவுகொண்ட பல்லாயிரக் கணக்கான செய்யுட்களைத் துதிகளாகவும், ரமணுேபதேச விளக்கங்களாகவும் பாடி யிருக்கின்ருர். மேலும், சந்தங்களாகவும், வர்ணங்கள் - கீர்த்தனங்கள்–கீதங்களாகவும், கண்ணிகள்-சிந்துகளாகவும் அவர் இசைத் தமிழிற் கீந்துள்ள பாடல்களிலுங்கூட பகவான் ரமணரின் பரமோபதேசங்களே நன்கு பதிக்கப்பெற் றுள்ளதை அவற்றை ஓதுவோர் உணர்வர்.

தமது குரு தேவரான ஸ்ரீ ரமண பகவானுடன் மிகக் குறைவான ஐந்தாண்டு காலமே தொடர்புற் றிருந்தா ராயினும் ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகள்,

ஈர விறகில் எரிபற் ருது;
நேரஞ் செல்லு(ம்) நெருப்பிற் குலர்ந்தவை;
கரியிற் பற்றுங் காலஞ் சிறிதே
திரியிற் பற்ற லெளிதே; வெடிமருந்
தத்திலுங்கற் பூர மதிலு மொருக்கணம்
பதியி லுடனே பற்றும் எரியே.*

* ஸ்ரீ பகவான் கூறிய இக் கருத்து Talks with Sri Ramana Maharshi பக்கம் 135ல் காண்க.

என்றபடி, தமது பணிவடக்கத்தாலும், ஸ்ரீ பகவானிடம் கொண்ட ஏக குருபக்திச் சிறப்பாலும் மிகவும் தகுதி பெற்றிருந்த காரணத்தால், குருவருளுக்குத் தக்க சற் பாத்திரமாகி,

“ விளக்கடிக்கே நின்று விலகா விருள்போல்
அளக்கருஞா ஞசா னடிக்கே துளக்கமறக்
காத்துமகங் காரமயற் காரிருள்போ காதுடலம்
மூத்துவிளிந் தாலூழ்* முறை! ”

என்னும் குருவாசகக் கோவையின் 152ஆவது பாடலின்படி குரு சந்நிதியிற் காலம் போக்கும் கூட்டத் தொருவ ராகாமல் குரு சந்நிதி வாசத்தின் பூரண பயனைப் பெற்றவ ரானுர். புதிதாக வந்த அன்ப ரொருவர் ஸ்ரீ ஸ்வாமிகளிடம், “நீங்கள் ஐந்து வருடந்தானே ஸ்ரீ ரமணருடன் இருந்திருக்கிறீர்கள்; உங்களைவிடப் பல்லாண்டுகள் பகவானுடன் இருந்தவர்கள் பலர் இருக்கின்றனரே!” என்று சற்று ஏளனமாக வினவினுர். அதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள், “ஆம்; நான் வெட்கமடைகின்றேன். ஏனெனில், ஆன்ம சக்தி வீறிட் டொளிரும் ஸ்ரீ ரமண சற்குரு சந்நிதியானது பக்குவிகளின் ஆன்ம தாகத்தை ஐந்தே நொடிகளில் தணித் தருளத்தக்கதாயிருக்க, என் விஷயத்தில் ஐந்து வருடங்கள் தேவைப்பட்டது என்ருல் அது என் அபக்குவ நிலையையே காட்டுகின்ற தன்ரூே? அதை எண்ணித் தான் வெட்க மடைகின்றேன்!” என்று கூறினர். இக் கூற்றிலுள்ள சிறந்த தன்னடக்கம் பெரிதும் சிந்தித்தற் குரியது.

ஸ்ரீ சாது ஓம் சுவாமிகள் 1945ஆம் ஆண்டு ஸ்ரீ ரமண பகவானை வந்தடைந்ததிலிருந்து முழுமையான குருபக்திக்கும் பரிபூரண ஆன்ம சமர்ப்பணத்திற்கும் ஒரு சிறந்த உதாரணமான தூய பொலிவுமிக்க வாழ்க்கையை நாற்பதாண்டு காலம் வாழ்ந்து வந்தார். அவர் ரக்தாக்ஷி ஆண்டு பங்குனி மாதம் நான்காம் நாள் (1985ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் பதினேழாம் நாள்), ஏகாதசி திதி, ஞாயிற்றுக்கிழமை, திருவோண நக்ஷத்திரம் கூடிய நன்னுளில் காலை 9-05 மணிக்கு விதேக கைவல்யம் எய்தி, தமது சற்குரு நாதராம் ஸ்ரீ ரமண பகவனின் திவ்விய பாதார விந்தங்களில் என்றென்றும் அகண்ட பரிபூரண ஐக்கியமானுர்.

ஸ்ரீ ரமண பகவான் தமது தாய்மொழியாகிய தமிழிலேயே தமது எல்லா உபதேசங்களையும் தெளிவாகக் கூறி வந்தனர்.

* ஊழ்—அபக்குவம்.

ஆனால் உள்ளது நாற்பது, உபதேச வுந்தியார், குருவாசகக் கோவை, அருணாசல ஸ்துதி பஞ்சகம், ஏகான்ம பஞ்சகம் போன்ற செய்யுள் நூல்களெல்லாம் சிறந்த, அரிய, செய்யுள் நடையிலேயே அமைந்துள்ள காரணத்தால், தமிழறிந்தோருள்ளும் பலர்க்கு அவற்றின் சரியான பொருள் விளங்குவதில்லை. இதுவே அவற்றின் பிறமொழி பெயர்ப்புக்கள், பிறமொழி விரிவுரைகள் பலவிலும் பற்பல பிழைகள் மலிந்திருப்பதற்கு முக்கியமான காரணங்களுள் ஒன்றாகும். ஆகையால், ஸ்ரீ பகவானது தமிழ்மூல நூல்களை மொழி பெயர்க்கவும், அவைகட்கு விரிவுரை எழுதவும், விளக்கங்கள் கொடுக்கவும் அத் தமிழ் நூல்களில் மிகச் சிறந்த பயிற்சியும் தமிழறிவும் ஒருவர் பெற்றிருக்க வேண்டியது அவசியம்; இவ் வகையில் ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகள் பரிபூரணத் தகுதி பெற்றுள்ளவர்; ஏனெனில், ஸ்ரீ ஸ்வாமிகளும் சிறந்ததோர் தமிழ்க் கவி என்பது மட்டுமன்றி ஸ்ரீ பகவானுடன் நேரே தாம் கொண்ட அணுக்கத் தொடர்பாலும், ஸ்ரீ பகவானாலேயே ஸ்ரீ முருகனாருடன் கூட்டுவிக்கப் பெற்று அவருடன் நெடுங்காலமாக இந் நூலாசிரியர் கொண்டிருந்த இலக்கியத் தொடர்பாலும் இவர் அப் பூரணத் தகுதியுடையவ ரானார்.

எனினும், தமிழ் மொழியின் வல்லமை மட்டுமே ஸ்ரீ பகவானது உபதேசங்களை அறிந்து கொள்ளவோ, பிறருக்குச் சரிவர விளக்கவோ போதுமான தல்ல! ஸ்ரீ பகவானது மூல நூல்களை உண்மைக்குப் புறம் போகாமல் மொழி பெயர்க்கவோ, விளக்கம் செய்யவோ வேண்டுமாயின் அவற்றின் உட்கிடக்கையை ஆழ்ந்து தெளிந்து அறியும் சக்தியும், அவ்வுபதேச நெறியையே அப்பியசிப்பதால் பெறும் அனுபவ அறிவும் முக்கியமாக இருக்க வேண்டும். இத் தகுதி இந் நூலாசிரியருக்கு எவ்வளவு இருந்திருக்கிறது என்பதையும், ஆன்மீகத்தின் எல்லாத் துறைகளிலும் எவ்வளவு ஆழ்ந்து பரந்த உண்ணோக்கும் இவருக்கு இருந்திருக்கிறது என்பதையும் இந் நூலை வாசிப்போர் செவ்வனே கண்டறிய லாகும். இதிலிருந்து, ஸ்ரீ ரமணோபதேசங்களைச் சிரவணம்-மனனம் செய்ததால் மட்டும் இந் நூல் உண்டாகி யிருக்க முடியாது என்பதும், நிதித்தியாசனத்தால் பெற்ற அனுபவத்தால் தான் இந் நூல் அமைந்திருக்க முடியும் என்பதையும் வாசகர்கள் தெற்றெென அறியலாகும்.

இந் நூலிற் காணக் கிடைக்கும் பல சிறந்த நூதனக் கருத்துக்கட்கும் பிரமாணம் (authority) ஸ்ரீ பகவானது தமிழ்

மூல நூல்களிலும், ஸ்ரீ பகவான் வாய்மொழியாகக் கூறி மற்ற ரமண பக்தர்களாற் குறிப் பெடுக்கப்பட்டு உருவான புத்த கங்களிலுமே காணப்படுகின்றன. ஆயினும் இந் நூல் மற்ற எந்த நூல்களிலும் உள்ளவற்றை அப்படியே எடுத்துத் தொகுத் துக் கொடுக்கப்பட்ட ஒன்றல்ல. ஸ்ரீ பகவானது பரந்த உப தேசக் கருத்துக்களையெல்லாம் ஒன்று விடாமல் திரட்டப்பட் டும், அப்பியாசத்துக் கேற்ற வரிசைக் கிரமமாக ஒழுங்கு படுத்தப்பட்டும், அவ் வுபதேசங்களின் உட்கருத்தை உள் ளாழ்ந்து கண்டு சுயமாகவே (originalityயுடன்) விளக்கும் புதுமைப் போக்கும் உடையதாகவே இந் நூல் அமைந்துள் ளது. ஸ்ரீ பகவானைப் பற்றிய மற்ற நூல்களில் மிக நுண்ணிய விதை வடிவில் போதிய விளக்கமற்று ஒடுங்கிக்கிடந்த பல கருத்துக்கள் இந் நூலில் நன்கு விளக்கப்பட்டு மிளிர்வதை வாசகர்கள் அறியலாம். ஸ்ரீ பகவானது உபதேசங்களை நன் கறிந்து அனுபவப்படுத்திக் கொண்ட தாலேயே இந் நூலாசி ரியரால் இவ்வளவு தெளிவாக அவைகளை எடுத்து விளக்க முடிந்திருக் கின்றது!

இந் நூலிற் கூறப்படும், சுகம், ஆன்ம விசாரம், பக்தி, உலகம் கடவுள் இவைகளின் இயல்பு, கர்மங்களின் தன்மை என்ற பல விஷயங்கள் நமக்கு முன்பே பரிசயமுள்ளவை களே யாயினும், ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகள் இவைகளைப் பற்றிக் கூற அணுகும் முறையும் விளக்கமும் அவருக்கே உரியதொரு அலாதியான நூதன முறையாக இந் நூலில் அமைந்துள்ளது! உதாரணமாக ஒன்று மட்டும் காண்போம்:

சாதாரணமாக வேதாந்த நூல்களில், 'ஆசைகளை விட் டொழி; சுகங்களை நாடாதே; துன்பத்தைத் தடுக்காதே' என்ற வடிவில் வைராக்கியம் வலியுறுத்திப் போதிக்கப்படுகின்றது. ஆனால் இந் நூலிலோ, 'சுகம் உன் உரிமை; அதைப் பெற விடாது உழை; அற்ப காமனு யிராதே; பூரண காமன் ஆவா யாக!' என்றதோர் புத்தம்புது முறையில் (படிப்போரைப் பய முறுத்தாமல்) சிலாகித்துக் கூறுவதுபோலவே கொண்டுபோய், 'முன்னிலை-படர்க்கைகளை நாடாதே; தன்னை நாடு' என்று இத மான மொழியில் பரிபூரண வைராக்கியமாகிற மலையையே விழுங்க வைத்துவிடுகிறார் ஸ்வாமிகள்! மண், பொன், பெண் ணைத் திட்டாமல் பூரண வைராக்கியத்தை லாகவமாகப் புகட்

டும் ஓர் அதிசயிக்கத்தக்க புதுமுறை யானது, கேவல சுத்த அத்வைத நூலாகிய இதில் நன்கு பொதிந்து கிடப்பது ஊன்றிக் கவனிப்பார்க்கு நன்கு விளங்கும்.

இந் நூலிற் காணப்படும் மற்றொரு முக்கியமான விஷயம் யாதெனின் பக்தி, உலகம், கடவுள், கர்மா போன்ற மற்ற எந்தவொன்றைப் பற்றிக் கூறப் புகும்போதும்கூட ஸ்ரீ ஸ்வாமிகள் முடிவில் ஸ்ரீ பகவானது முக்கிய போதனையாகிய ஆன்ம விசாரமே செய்யத் தக்க ஒரே சாதனை என்ற முடிவிற்கே வாசகர்கள் வந்து சேரும்படியே அவ் விஷயங்களை முடிவில் விளக்கி நிரூபிக்கின்றார். ஆதலால் வாசகர்கள் இந் நூலின் இரண்டாம் பாகத்தை வாசித்து முடித்த பின் மறுபடியும் முதற் பாகத்தை வாசிப்பரேல் மிகுந்த பயனுண்டாகும்.

இந் நூல் ஆன்மீக சாதனையை—ஆன்மவிசாரத்தை—அப்பியசித்து அனுபவப் படுத்துவதற்குரிய விஷயங்களைக் கூறுவதையே அடிப்படை நோக்கமாகக் கொண்டு அமைந்திருப்பதாலும், ஆன்மக் கலையின் எல்லா நுட்பங்களையும் பற்றிக் கூறுவதாலும் இதிற் காணப்படும் அதி நுட்பமான கருத்துக்களும் உளவுகளும் பரந்த ஆன்மீக விஷயங்களுள் ஒவ்வொன்றையும் நுட்பமாக சம்பந்தித் திருப்பதாலும் இந் நூலை ஒரு முறை மட்டும் படித்து முடிப்பதால் முழுப் பயனும் எய்த முடியாது. ஒரு முறை இந் நூல் முழுதும் படித்து முடித்தபின் மறுபடியும் முதலிலிருந்து படிக்க ஆரம்பித்தால் முதன் முறை வாசித்த போது புரிந்ததை விட அதிக நுட்பமான விஷயங்கள் இப்போது மிகவும் புதுத் தெளிவுடன் புலனாவது பலரது அனுபவம். எனவே இந் நூலின் பூரணப் பயனையும் அடைய விரும்புவோர் இதைத் திரும்பவும் திரும்பவும் பலமுறை வாசிப்பது நல்லது. மேலும் இந் நூலை வாசித் தறிந்த விஷயங்களை ஆழ்ந்து சிந்திப்பது (மனனம் செய்வது) அதனினும் அவசியமும், பிறகு உண்மையான சிரத்தையுடன் செயல் முறைக்குக் கொண்டு வருவதும் (நிதித்தியாசனமும்) அதனினும் அவசியமுமாகும். அப்போதுதான் இந் நூலின் பூரணப் பயனை நாம் அடைய முடியும்.

திருவண்ணாமலை
ஸ்ரீ பகவான் ஆராதனைத்
திருநாள், 17—4—85.

**பேராசிரியர் K. சுப்ரமணியன்**

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ ரமண சரிதச் சுருக்கம்

முத்திக்குப் பூதலமே மூவுலகில், பூதலத்துள்
ளுத்தமமோ பாரதமே யுய்வருளுஞ்—சத்தி
பலவா றெளிரும் பதிகளுக் கெல்லாந்
தலைவா மருணா சலம்.

ஆரூருங் காசியுட னம்பலமு முத்திதருஞ்
சீரூர் பிறப்பிறப்பு சேவிப்பால்—யாரு
நிலமேல் விமுத்தி நினைவா லடையுந்
தலமே யருணா சலம். — ஸ்ரீ அருணாசல வெண்பா

பரம்பொருளின் நாம ரூபம்

அருணாசலம் பூமியின் இதயம். சிவபிரானது ஆதிலிங்க வடிவம். ஞானாக்கினி மலை. பிரம்ம விஷ்ணுக்களுங்கூட நிலை கலங்கிய காலத்தில் அவர்கட் கிடையில் அறிவொளி மலையா யுற்பவித்து, அகந்தையை யடக்கி, அறிவு புகட்டியருளிய ஞானகுரு அருணாசலம். இங்ஙனம் சிருஷ்டியின் ஆதிகாலந் தொட்டே மூவுலகிற்கும் ஸ்ரீ அருணாசலம் ஞான குரு பீடம் வகித்து வருவதாகும். எனவே தற்காலத்தும் அது உலகிற்கு மெய்ஞ்ஞானத்தை யுபதேசிக்க வல்ல உண்மையான சற்குருமூர்த்தியாய், பகவான் ஸ்ரீரமண வடிவில் தோன்றி, தான் பதினாறு வயதினனாகவே தோன்றிய ஆதிகுரு ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியின் அபேத சொருபமே என்ற உண்மையை எடுத்துக் காட்டும் வண்ணம், தனது பதினாறுவது பிராயம் நிறைந்தவுடனேயே சொரூப ஞானம் மலரப் பெற்று, அருணாசலத்தில் ஞான சற்குருவாக வந்தமர்ந்து, அரை நூற்றாண்டுக்கு மேல் எழுந்தருளியிருந்து எண்ணற்ற ஜீவ கோடிகளைப் பிறவிப் பிணிதீர ஆட்கொண்டு உய்வித்தருளியது!

பரம் பொருள் தம் படைப்புயிர்களைப் பற்பல பிறவிகள் தோறும் ஆன்ம ஞானப் பேற்றிற்குப் பக்குவப் படுத்திக்கொண்டே வந்து, முடிவில் தாமே ஒர் சற்குரு வடிவில் அவதரித்து, அவ் வக்காலத்திற் பரிபூரண பக்குவ மடைந்துள்ள அவ்வுத்தம

அடியார்கள், உலகின் எவ்வெப் பாகங்களிற் பிறக்க நேர்ந்திருந் தாலும் அவர்களை யெல்லாம் காந்த மிரும்புபோற் கவர்ந்து தம் திருவடிக் கிழுத்து வந்து, மெய்ஞ்ஞான மருளித் தன்னில் இரண்டற ஐக்கியப் படுத்திக் கொள்வது திருவருள் நியதியாகும். இங்ஙனம் தற்போது சற்குரு வுருக்கொண்ட அப் பரம்பொரு ளின் உண்மைத் திரு நாம மென்ன? ஸ்ரீ ரமண பகவான் என்ற திருநாமத்தால் நம் மெல்லோராலும் போற்றப் பெற்ற இம் மகா புருஷர் தாம் பாடிய ஸ்ரீ அருணாசல அக்ஷர மணமாலையின் கடைசி யடியில் அண்ணாமலையையே "அருணாசலரமண" என்று பெயரிட் டழைக்கின்றார். இதிலிருந்து, இவர் 'ரமண' என்ற நாமத்தை அண்ணாமலைக்கே இடுகின்றார் என்பது தெரிகின் றது! பிறகு உபதேச நூன்மாலையில் 'அண்ணாமலை யென் னான்மா' என்று பாடுவதிலிருந்து, தனது சாட்சாற்காரப் பர வஸ்துவாகிய ஆன்மாவே இவ் வண்ணாமலை என்று தெரிவிக் கின்றார். மற்றொருகால், தனது நிஜ சொரூபத்தைக் குறித்து வினவிய அன்ப ரொருவருக்கு,

"அரியாதியி தரசீவர தகவாரிச குகையில்
அறிவாய்ரமி பரமாத்தும னருணாசல ரமணன்..."

என்று விடையளிப்பதை நோக்கும் போது, தன்னை அருணாசல ரமணன் என்றே அங்கீகரித்துக் கொண்டதும் வெளிப்படை யாகின்ற தன்றோ! இதிலிருந்து அருணாசலமே ஸ்ரீரமணர் என்ப தும், ஸ்ரீரமணரே ஸ்ரீஅருணாசலம் என்பதும் அவரது திருவாக்கி னாலேயே 'அருணாசல ரமண' என்ற சொற்றொடரை யிசைத்தி ருப்பதால் அவரது உண்மைத் திருநாமம் 'அருணாசலரமணன்' என்பதும் தெற்றென விளங்குகின்ற தன்றோ! இவ்வாறு, உத்தம ஞானாசிரியராய், உலக மகாகுருவாய் விளங்கிய பகவான் ஸ்ரீஅரு ணாசல ரமணர், நாமரூப மற்ற பரம்பொருளினும் வேறு பொருள் அல்ல ரெனினும், அவரது திருமேனியின் வாழ்வையே அவரது திவ்விய சரிதம் என்று கொள்ளும் உலக வழக்கிற் கிணங்க ஸ்ரீ ரமண சரிதத்தைச் சுருக்கமாகக் காண்போம்.

### பிறப்பும் வளர்ப்பும்

தமிழகத்தில் மதுரைமா நகருக்குத் தென் கிழக்கே முப் பது மைல் தூரத்தில் திருச்சுழி என்னும் சிவஸ்தலம் ஒன்றுள் ளது. இது சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் மணிவாசகராலும் பாடப் பெற்ற ஸ்தலம். இப் பதியின் கண் சுந்தரமையர் அழகம்

மை என்ற அந்தணோத்தமத் தம்பதிகள் வாழ்ந்திருந்தனர். சுந்தரமையர் ஓர் வழக்கறிஞர். தம்மை அண்டியவர்கட் கெல்லாம் அமுதூட்டி அரும்பசி போக்கி உபசரித்த அறப் பண்பினர். இறைவனது துதிகளை இசைத்த வண்ணமே இல்லறப் பணி புரிந்துவரும் நல்லாள் அழகம்மை. இவர்களின் இரண்டாவது மகவாய் பகவான் ஸ்ரீ ரமணர் கி. பி. 1879-ஆம் ஆண்டிற்குச் சரியான பிரமாதி வருடம், மார்கழி மாதம், பதினாறும் நாள், புனர்வசு விண்மீன் கூடிய திங்கள் நன்னாளில் (30-12-1879) இரவு மணி 1-க்கு அவதரித்தார். இது பிரம்ம விஷ்ணுக்களுக்கிடையில் ஸ்ரீஅருணாசல ஞானாக்னி ஸ்தம்பமாக சிவ பிரானான பரப் பிரம்மம் அவதரித்த-தோன்றிய-திருவாதிரைத் திருநாளேயாகும். இவருக்குப் பெற்றோரிட்ட பிள்ளைத் திருநாமம் வேங்கடராமன் என்பது. வேங்கடராமனின் மூத்த சகோதரர் நாகசாமி; இளைய சகோதரர் நாகசுந்தரம். அலர்மேலு இவர்களது தங்கை.

விபரந் தெரியாத குழந்தைப் பருவத்திலிருந்தே வேங்கடராமனது பிஞ்சுள்ளத்தில் 'அருணாசலம்-அருணாசலம்' என்றொரு ஸ்மரணை தாமாகவே இருந்து வந்தது ! ஆயினும் 'அருணாசலம்' என்றால் 'திருவண்ணாமலை' என்றுங்கூட அவர் அப்போது அறியார். ஆனால் 'அருணாசலம் என்பது எல்லாவற்றிலும் மிகமிகச் சிறந்த ஒன்று; மிகப் பெரியது' என்று மட்டும் ஓர் உள்ளுணர்வு அவருக்குச் சதா இருந்து வந்தது. பிறகு இவர் மதுரையில் பத்தாம் வகுப்பிற் படித்து வந்த காலத்தில் தான் (1895, நவம்பர் மாதத்தில்தான்) ஓர் நாள் உறவினரான ஓர் முதியவரின் மூலம் 'அருணாசலம் என்பது திருவண்ணாமலையே' என்று அறிந்து கொண்டார். 'நினைக்க முக்தி தருவது அருணாசலம்' என்னும் அருள் வாக்கை இவரது ஜீவன் முக்த வாழ்வு மெய்ப்பித்த தல்லவா?

வேங்கடராமன் திருச்சுழியிலும் திண்டுக்கல்லிலுமாகத் தனது ஆரம்பப் படிப்பை முடித்தார். தமது 12 ஆவது வயதில் திண்டுக்கல்லிற் படித்து வரும்போது அவரது தந்தை சுந்தரமையர் 1892 ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் நோய்வாய்ப்பட்டார் இதைக் கேள்விப்பட்டவுடன், வேங்கடராமன் திண்டுக்கல்லிலிருந்து திருச்சுழிக்கு வந்தார். வந்த நாலைந்து நாட்களில் (18-2-1892ல்) தந்தை காலமானார். தந்தையின் உடலைக் கண்ட வேங்கடராமன்,"அப்பாதான் இதோ படுத்திருக்கிறாரே!

அப்பா போய்விட்டார் என்கிருர்களே”என்று வியப்படைந்தார். ஆனுல் அருகிலிருந்த ஒருவர் 'இவ் வுடம்புதான் உன் அப்பா வானுல், அவர் இப்போது உன்னுடன் அன்போடு பேசி அளவ ளாவ மாட்டாரா? அதனுல் உன் அப்பா போய் விட்டார்' என் ருர்.

பிற்காலத்தில் ஒரு சமயம் ஸ்ரீ பகவான் இந் நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிட்டதாவது : "என் தாயாரும் சகோதரர்களும் அழுது கொண்டிருந்தனர். அச் சமயமெல்லாம் நான் 'மரணம் என்ருல், என்ன அது' என்று தீவிரமாகயோசித்துக் கொண்டே யிருந்தேன். தந்தையின் உடல் தகனம் செய்யப்பட்டது. அதுவரை இவ்வாறே சிந்தித்து வந்த நான், 'உடலில் நான் என்று விளங்கிக்கொண்டிருப்பது எதுவோ அது தான் கண், காது முதலிய இந்திரியங்கள் மூலம் கண்டும், கேட்டும், நடந்தும், பேசியும் ஏனைய எல்லாக் காரியங்களிலும் உடலை இயக்கிக் கொண்டு இருந்திருக்கின்றது' என்று தீர்மானித் தேன். 'என் உடலிலுள்ள "நான்"இப்போதும் இருந்து கொண் டே யிருக்கின்றது. ஆனுல் அப்பாவின் உடலிலிருந்த "நான்" அவ் வுடலை விட்டுப் போய் விட்டது' என்ற முடிவுக்கு வந்தேன். அன்று முதல்,பிறகு ஆன்ம ஞான விளக்கம் ஏற்பட்ட காலம் வரையில் இக் கருத்து என் மனத்தில் ஊறிக்கொண்டேயிருந்து வந்தது".

இவ்வாறு இச் சம்பவம் வேங்கடராமனின் உள்ளத்தில் தன் தந்தை என்னும் உயிர்ப்பொருள் இச் சடவுடலல்ல என்ற அறிவுக் கனலின் ஓர் சுடர்ப் பொறியை உதயமாக்கி விட்டது. அவரது பதினுருவது வயதில் மலர்ந்த ஆன்ம ஞானப் பிரகாசத் திற்கு இதுவும் ஓர் வித்துணர்வே.

அதன் பிறகு வேங்கடராமனும் அவரது மூத்த சகோதர ரான நாகசாமியும் மதுரையிலிருந்த தமது சிறிய தந்தை சுப் பையர் வீட்டில் வந்து தங்கி மேற்படிப்பைத் தொடர்ந்தனர். மதுரையிலுள்ள அமெரிக்கன் மிஷன் உயர் நிலைப்பள்ளியில் வேங்கடராமன் படித்து வந்தார். தெளிந்த நுட்ப புத்தியும் கூரிய ஞாபக சக்தியும் உடையவரா யிருந்துங்கூட அவர் அவற் றைப் பள்ளிப் படிப்பிற் பயன்படுத்திக் காட்டவில்லை. வகுப்பில் நடுத்தர மாணவராகவே காணப்பட்டார். நல்ல ஆரோக்கிய மான உடல். மற்போர், பந்தாட்டம், சிலம்பம், நீச்சு முதலிய விளையாட்டுக்களில் இவரே முன்னணி வகிப்பார்.

### ஆன்ம சாட்சாற்காரம்

அந் நாட்களில் வேங்கடராமன் மற்ற நண்பர்களோடு சேர்ந்து ஆலயம் சென்று சாதாரணமாகக் கோவில் மூர்த்திகளை வணங்கித் திரும்புவ துண்டு. 'அருணாசலம் என்பது திருவண்ணாமலையே' என்றறிந்த பின், ஏறக்குறைய சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் அறுபத்து மூன்று நாயன்மார்களாகிய சிவனடியார்களின் திவ்விய சரிதங்க ளடங்கிய பெரிய புராண வசன நூல் ஒன்று யதேச்சையாக அவர் கையிற் கிடைத்தது. அதை வாசித்ததும் அரிய சிவ பக்திக்கனல் உள்ளத்திற் பொங்கியெழுந்து, அந்த நாயன்மார்களைப் போன்ற உத்தம பக்தி தனக்கும் உண்டாக வேண்டும் என்று ஏங்கி நின்றார் வேங்கடராமன். ஆயினும் இதுகூட அல்ல அவருக் கேற்பட்ட ஆன்ம ஞானப் பேற்றிற்கு முக்கிய காரணம். பத்தாவது வகுப்புப் பரீட்சை எழுது முன்னரே அவரது வாழ்வில் ஓர் அரிய தெய்வீக மாற்றம் திடீரென ஏற்பட்டது. அது எவ்வாறெனின் :

அன்று 1896 ஆம் ஆண்டின் ஜுலை மாதத்தின் மத்திய வாரத்தில் ஓர் நாள். மாடியில் ஓர் சிறு அறையில் வேங்கடராமன் தனித்து அமர்ந்திருந்தார். உடலில் யாதொரு நோயுமில்லாதிருந்தும் தான் சாகப்போவதாகத் திடீரென ஓர் பெரும் மரணபீதி அவருள்ளத்திற் றோன்றிற்று.அது வெறும் தோற்ற மாத்திர பீதியாக மட்டுமில்லாமல், அவருக்கு நேரும் நிஜமரண நிகழ்ச்சியாகவே அனுபவ மாயிற்று. வேங்கடராமன் இதனாற் கலங்கிவிட வில்லை. யாரிடமும் சொல்லவு மில்லை. வந்து கொண்டிருக்கும் சாவைத் திரமாக வரவேற்று, ஆராய்ந்து,தாமே அதற்கோர் முடிவு காணத் துணிந்தார். அவர் உடனே,"சரி,மரணம் வந்து விட்டது; வரட்டும்; சாவு என்று லென்ன? சாவு யாருக்கு வருகிறது ? எனக்கு ; நான் யார்? சாவது எது? இவ் வுடலே சாகப் போகின்றது; சாகட்டும் !" என்று தீர்மானித்துக் கை கால்களை நீட்டிப் படுத்துக் கொண்டார். உதடுகளை இறுக மூடிக் கொண்டு, பேச்சு மூச்சற் றிருந்து கொண்டு, தன்னை உள்ளே கூர்ந்து கவனித்தார்; மரணம் அனுபவ மாயிற்று! அப்போது அவருள் உணர்வாகியது என்ன ?

"சரி, இவ்வுடல் செத்து விட்டது. இனி இதை மயானத்திற்குக் கொண்டு சென்று எரித்து விடுவர். இது சாம்பலாகி விடும். இவ்வுடலின் அழிவோடு நானும் அழிந்து விட்டேனா ?

இவ்வுடல்தான் நானா? இதோ இவ்வுடல் பிணமாகிய பின்னும் இம் மரணத்தாற் சிறிதும் பாதிக்கப் படாமல் நான் இருந்து விளங்கிக்கொண்டிருக்கிறேனே! ஆகவே மரிக்கும் இவ் வுடலல்ல நான். இவ்வுடல் வேறு; நான் வேறு. நான்* அழிவற்ற நானே (ஆன்மாவே). உடலிற் கட்டுப்படாத நான் ஒன்றே அனைத்திலும் அதி யுண்மையான பொருள்! இவ் வுடலுலகம் அழிவிற் குரியன. உடலைக் கடந்த நானே நித்திய வாழ்வினனான பரம்பொருள்!''

இந்தத் தன துண்மையறிவு—ஆன்ம ஞானம்—பிரத்தியட்ச அனுபவமாக,மனோவாக்குக்களின் செயல் சிறிது மின்றி,கையிற் கனியாக, அவருக்கு ஒரு நொடியில் விளங்கிற்று.முன்பு எழுந்த மரண பயமும் என்றென்றுந் திரும்பாமல் அதோடு மறைந் தொழிந்தது! ஞான விழிப்பாகிய இவ் வான்மானுபூதி நிலையே, அது முதற்கொண்டு அவரது இயல்பு நிலையாகக் (natural state) காலதேசக் கட்டற்று நிலைத்து விளங்கலாயிற்று.

திருவண்ணாமலையில் ஸ்ரீ ரமண பகவான் பல்லாண்டுகள் கண்மூடிக் கடுந்தவம் செய்திருந்து பிறகு ஆன்ம சாட்சாற் காரம் பெற்றார் என்றும், அவ்வாறு பல்லாண்டுகள் தவத்திற்குப் பிறகே சகஜாத்மஸ்திதி அவருக்கு உண்டாயிற்று என்றும் மக் கள் பலர் கருதியும் எழுதியும் வந்துள்ளன ரன்றோ? ஆனால் ஸ்ரீ பகவான் தமது தேக வாழ்வின் இறுதிக் காலத்தில் தமது அருள் வாக்காலேயே பலமுறை அதை மறுத்துள்ளனர். அவர், 'மதுரையில் உதித்த சூரியனே திருவண்ணாமலையிலும் உள்ளது. புதிதாக எனக்கு ஒன்றும் கூடவோ குறையவோ இல்லை' என்று கூறி யருளினர்†

---

* விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் (The Old Testament, Exodus iii-14) தடித்த எழுத்துக்களிற் றரப்பட்டுள்ள 'I AM THAT I AM' என்ற மகாவாக்யானுபவமே இது!

†மற்றும் ஒரு முறை இது பற்றி 4-10-1946 ல் திரு D. S. சர்மா என்ற அன்பரொருவர் 'தாங்கள் மும்மலங்க ளறும்படி பலநாள் (ஜபதபங்களாகிய) சாதனைகள் இயற்றியதுண்டா?' என்று வின விய போது ஸ்ரீ பகவான்:-

''அத்தகைய சாதனைக் காலம் ஒன்றும் நானறியேன்!நான் பிராணாயாமமோ ஜபமோ செய்ததே யில்லை. மந்திரமொன்றும்

இவ்வாறு வேங்கடராமன் புறத்தே நர வடிவில் எவருமோ, சுர வடிவில் தெய்வங்களோ, யாரும் தமக்குக் குருவாக அமை யாமலும், அகத்தே தம் வாணுளில் நெடுங்காலச் சாதனுனுஷ்டா னமாகச் சிரமங்களோ, தவங்களோ இல்லாமலும், பள்ளிக்குச் செல்லும் பையற் பருவமாம் பதினாறுவது வயதிலேயே, தாமா கவே தனக்குத் தோன்றியதோர் மரண பீதியை வியாஜமாகக் கொண்டு சிறு பொழுதிற்குள் பெருஞ் சிவஞானச் செல்வராய் மாறப் பெற்ருர்! அவருக்கு அன்றுதித்த மெய்ஞ்ஞானம் கூடுதல் குறைதலற்று என்றும்ஒரு படித்தாய் அவரிடம் நிலைத்து விளங்க லாயிற்று. உபநிஷத்துக்களிலும், இதர சகல வேதாந்த சாஸ்த்

---

எனக்குத் தெரியாது. தியானம், பாவனை என்ருல் என்ன என்று கூட எனக்குத் தெரியாது. பிற்காலத்தில் இவைகளைப்பற்றிக் கேள்விப்பட்ட போதுகூட அவைகளிற் கவர்ச்சியொன்றும் உண் டாக வில்லை. இப்போதும் அவைகளைப் பற்றி நினைக்கக்கூட மனம் மறுக்கிறது. சாதனை என்ருல் சாதிக்க வேண்டியதாக ஒரு வழியும், அதனுல் சாத்தியமாக்க வேண்டியதான ஒரு குறிக் கோளும் இருந்தாக வேண்டும். நம்மிடம் இயல்பாக முன்பே இல்லாத எந்த ஒன்று இனி முயன்றடைய விருக்கின்றது?

"தியானித்தல், பாவித்தல், ஏகாக்கிரமுறுதல் என்பதெல்லாம் என்னவென்ருல், ஒன்றும் நினையாமல் சும்மாவிருப்பதுதான்! அப்போது நம் சுபாவ நிலையில்தான் இருக்கிருேம். இந்த நம் இயல்பு நிலையே மோக்ஷம், ஞானம், ஆத்மா என்று பலவா றழைக்கப்படுகின்றது. நான் சில காலம் கண்மூடி இருந்த துண்டு. அதனுல் அப்போது நான் ஏதோ தவமோ சாதனையோ செய்ததாக அர்த்த மல்ல. இப்போதுகூட சில சமயம் நான் கண் மூடி இருப்ப துண்டு. மக்கள் இதையும் நான் தவம் செய்கிற தாகக் கூறினுல் கூறிக் கொள்ளட்டுமே. அதனுல் எனக் கொன்று மில்லை. பெரிய தவம் ஏதோ செய்து கொண்டே வந்தால், ஒரு நாள் 'ஆத்மா' என்று ஒரு பெரிய மகத்தான பொருள் அவர்கள் மேல் வந்து இறங்குமென்றும், அதுதான் ஆன்மசாட்சாற்காரம் என்றும் கருதுகின்றனர். ஆன்மா எப்போதும் சாக்ஷாத் (நேரே விளங்குவது)தான். ஆனுல் 'காரம்', 'கிருதம்' என்பதெல்லாம் அங்கு ஒன்றுமில்லை. 'காரம்' என்ருல் ஏதாவது செய்யும் ஓர் செயலைக் குறிக்கும். ஆனுல் ஆன்மா எச் செயலுமற்று, தான் மாத்திரமாய் சும்மா விருப்பதால் உணரப்படுகிறதே தவிர எந் தச் செய்கையாலும் அடையப்படுவ தல்ல" என்று கூறியுள்ளார்.

திரங்களிலும் பரம புருஷார்த்தமாகக் கோஷிக்கப்படும் உயர்வற வுயர்ந்த ஸஹஜாத்ம ஞான ஸ்திதியை வேங்கடராமன் இவ்வாறு எடுத்த எடுப்பிலேயே எய்தி நின்ருர்!

ஸ்ரீராமன், ஸ்ரீகிருஷ்ணன் முதலியோர் உட்பட, மண்ணுலகம் இதுகாறுங்கண்ட மஹாபுருஷர்கள் ஒவ்வொருவருக்கும் யாரேனும் ஒருவர் நர வடிவிற் சற்குருவாக விருந்தே அருள் செய்ததற்குச் சரித்திரம் சான்று தருகிற தன்ருே? அதிதீவிர பக்குவியான புத்தர் மட்டும் நரவடிவிற் குருவின்றியே உண்மையுணர முடிந்ததேனும், அவருக்குங் கூட, பற்பல பயனற்ற போலி குருமார்களிடம் சென்று சென்றலுத்து, பிறகு அவர்களை யகற்றி, தனித்துப் பல்லாண்டுகள் தவமியற்றிய பிறகே மெய்யறிவு கைகூடிற்று என்பதும் உலகறிந்ததே. ஆனல் பகவான் ஸ்ரீரமணரோ யாதொரு பாடுமில்லாமல், தானே (ஆன்மாவே) தனக்குச் சற்குருவாக (தான் மூவேழுலகின் முதற்குருவான ஆதிகுரு ஸ்ரீதக்ஷிணமூர்த்தியைப் போலவே) அமைந்தனர்!

இவ்வான்ம சாட்சாற்கார அனுபவம் வேங்கடராமனது புற வாழ்விலும் உரைத்தற்கரிய பெரும் மாறுதல்களை உண்டாக்கி விட்டது. தான் இவ் வுடலல்லாத நித்திய பரிபூரணப் பொருள் என்பது அவருக்கு அனுபவ சித்தமா யிருப்பதால், அன்றுமுதல் அவரது வாழ்வே உலகத்தாரின் வாழ்வுக்குக் கொஞ்சமும் ஒத்து வராத, உலகத்தார்க்குப் புரியாத, அவர்கள் அவ்வாறு முயன்ருலுங் கூட வாழ முடியாத, ஓர் புத்தம் புது ஆச்சரிய வாழ்வாகி விட்டது.

இதற்குமுன் பள்ளிப் படிப்பிற் கொஞ்ச அளவாவது ஒட்டிக் கொண்டிருந்த சிரத்தையும் இவ் வனுபவத்திற்குப் பிறகு அடியோடு இல்லாமற் போய்விட்டது. பிறருக்குத் தோற்ற மாத்திரமாகப் பள்ளிக்குச் சென்று வரலானர். விளையாட்டுக்களும் சப்பிட்டு மறைந்தன. நண்பர், உற்ருர், உறவினர்களிடமும் முன்பிருந்த அபிமானம் வாஞ்சையெல்லாம் மறைந்து போயின. உணவிலும் நடையுடையிலும் அப்படியே. இதற்கு முன் நியாயங்களுக்காகப் போராடும் அவர், இன்று நியாய அநியாயங்களைக் குறிக்கும் எந் நிகழ்ச்சிகளிலும் உதாசீனராய், சும்மா விருப்பவ ராகிவிட்டார். முன்பு தன்னை யாராவது தூஷித்தால் பதிலுக்குப் பலமாகத்திட்டிவிடும் அவரது பழைய சுபாவம்

மாறிப்போய், உதாசினமும் மன்னிப்பும் கூடியஒரேயொரு சிறிய அருட்புன்னகையே அவரது முகத்திலிருந்து அவர்களுக்கு விடையாக இப்போது வர ஆரம்பித்தது!

இவ் வான்மதரிசனம் அற்புதமான மனமாற்றத்தை யுண்டு பண்ணி அவரைப் பரம சாதுவாக்கி விட்டது. அன்பு, அஹிம்சை, பொறுமை, தயை, மன்னிப்பு, அடக்கம், பணிவு, பயமின்மை முதலிய தெய்விக சம்பத்துக்கள் பலவும் அப்பியாசத்தின் பயனாக உண்டாகாமல், ஆன்மானுபவத்தின் விளைவாக, சுபாவமாக, பூரணமாக அவரிடம் அமைந்துவிட்டன! விழிப்புற்றவனுக்கு வெறுமையாய்ப் போகும் சொப்பனத்தைப் போல, வேங்கடராமனுக்கு இவ் வியவகாரிக உலக வாழ்வு சாரமற்றதும், சத்தியமற்றது மாயிற்று. அது முதல் எப்பொழுதும் தனிமையில் அமர்ந்து, தன்னுள் ளாழ்ந்து, ஆன்மானுபவத்திலேயே சொக்கியிருப்பது அவரிடம் அடிக்கடிக் காணப்பட்டது. சுருங்கச் சொல்லின் பழைய வேங்கடராமனே இல்லாமற்போய் பகவான் ரமணரே விளங்கலானார்!

ஸ்ரீரமணரின் 12ஆவது வயதில் திண்டுக்கல்லில் பள்ளியிற் படித்து வந்த பாலப் பருவத்திலுங்கூட இவ் வரிய ஆன்ம நிஷ்டையின் அறிகுறி யொன்று ஒருமுறை அவரிடம் காணப்பட்டதுண்டு. எனினும் அன்று அவரருகிலிருந்தோர் அதன் அருமை யறிந்திலர். ஸ்ரீரமணர் அப்போது ஓர் நாள் வீட்டுக்கதவை உள்ளே தாளிட்டு விட்டுப் படுத்திருந்தார். வெளியிற் சென்றிருந்த வீட்டார் திரும்பி வந்ததும் உரக்கக் கூப்பிட்டனர்; கதவைப் பலமாகத் தட்டினர். கதவு திறக்கப்படவில்லை! உடனே வேறு வழி ஏற்படுத்திக் கொண்டு, வீட்டார் உள்ளே வந்து ரமணரின் உடலைப் புரட்டியும், உலுக்கியும், அடித்தும், குத்தியும் எழுப்ப முயன்றனர். அவர் எழுந்திருக்கவே யில்லை! பிறகு அவர் தாமாகவே அந்நிலை கலைந்து விழித்தெழுந்தார். திரண்டிருந்த மக்கள், "இது கும்பகர்ணத் தூக்கமோ!" என்று கூறி அதிசயித்தனர். ஆனால் இது வெறும் உறக்கமோ மயக்கமோ வல்ல. உண்மைச் சமாதி நிலையே. இது பற்றி ஸ்ரீபகவான், "ஏதோ விட்ட குறை, தொட்ட குறை* ஒட்டிக் கொண்டது போலும்! எப்போதும்

*விட்டகுறை, தொட்டகுறை இதன் விளக்கத்தை இந்நூலின் பிற்பால் 2 ல் பார்க்கவும்.

மூலத்திலேயே நாட்டமுற்றிருக்கும்!" என்று பிற்காலத்திற் கூறிய துண்டு.

### அருணாசல யாத்திரை

படிப்பிற் கவனமற்றதால் இப்போது வேங்கடராமனைப் பள்ளி ஆசிரியருங் கண்டிக்கலானார். அண்ணா நாகசாமியும் தம்பியிடம் காணப்பட்ட பெரும் மாற்றத்தைக் கண்டு சீற்றமுற்றார். ரமணர் அடிக்கடி சமாதி நிஷ்டரா யமர்ந்திருப்பதைப் பார்த்து, "பெரிய வாள், யோகீசுவரர்" என்று கேலி செய்யலானார். ஆனால் உண்மை தெளிந்து உறுதி கொண்ட ரமணரது உள்ளம் இவைகளைப் பொருட் படுத்துவ தில்லை. ஒரு முறை ஆங்கில இலக்கணப் பாடத்தில் தவறிய வேங்கடராமனை ஆசிரியர், "மூன்று முறை திருப்பித் திருப்பிப் பாடத்தை எழுதி வா" என்று தண்டனை விதித்தார்.

மறுநாள் 1896 ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதத்தின் 29 ஆம் தேதி, சனிக்கிழமை. பாடத்தை இரண்டு முறை எழுதி முடித்தார் ஸ்ரீரமணர். இப் பயனற்ற பள்ளிக் காரியத்திற் சலிப்பேற்பட்டது. எழுதுகோலையும் புத்தகத்தையும் எட்ட எறிந்தார்; நிமிர்ந்தமர்ந்து நிஷ்டைகூடினார். இதைப் பக்கத்திலேயே யிருந்து பார்த்துவந்த அண்ணன் நாகசாமியின் மனம் அளவற்ற வருத்தமடைந்தது. அவர் தம்பியை அறிவு புகட்டித் திருத்த நினைத்து, 'இப்படியெல்லா மிருப்பவனுக்கு இதெல்லாம் என்னத்திற்கு?' என்று பரிவு கலந்த முனிவோடு கூறினார். இம் மாதிரியான நிந்தைகளில் எப்பொழுதும் உதாசீனமாகவே யிருக்கும் ரமணருக்கு அன்று மட்டும் அவ்வார்த்தைகள் அர்த்த முள்ளவையாகத் தோன்றின. 'ஆம்,அண்ணன் சொல்வது மெய்யே; இனி எனக்கு இங்கு இவைகளுடன் என்ன காரிய மிருக்கின்றது? ஒன்றுமில்லை' என்று கருதிய ரமணர் உடனே வெளியேறத் தீர்மானித்தார். அச்சமயம் சட்டென அருணாசலத்தின் ஞாபகம் தாமாகவே முன் வந்து நின்றது! 'ஆம்; அருணாசலமே இனி அடைய வேண்டிய இடம்' என்றெண்ணி எழுந்தார்; நடந்தார்! அப்போது நாகசாமி சிற்றியிடம் ஐந்து ரூபாய் பெற்றுத் தனது கல்லூரிச் சம்பளத்தைக் கட்டிவிடும்படிக் கூறினார்.

ஸ்ரீரமணர் ஓர் பழைய சென்னை இராஜதானிப் படத்தைக் கவனித்தார். அதில் திருவண்ணாமலைக்குச் செல்லும் விழுப்புரம்-

காட்பாடி ரயிற்பாதை குறிக்கப்பட வில்லை. அதனால் திண்டிவனமே அதற்கேற்ற வண்டி நிலையம் எனத் தீர்மானித்தார். தம் சிற்றியிடம் பெற்ற ஐந்து ரூபாயில் மூன்றை மட்டும் எடுத்துக் கொண்டார். மீதி ரூபாய் இரண்டுடன் ஓர் கடிதத்தை அவசரமாக எழுதிவைத்தார். புறப்பட்டு விட்டார். அக் கடிதமாவது:—

என் தகப்பனுரைத் தேடிக்கொண்டு

"நான் ^ அவருடைய உத்தரவின்படி இவ்விடத்தை விட்டுக் கிளம்பிவிட்டேன். இது நல்ல காரியத்தில்தான் பிரவேசித்திருக்கிறது. ஆகையால் இந்தக் காரியத்திற்கு ஒருவரும் விசனப்பட வேண்டாம். இதைப் பார்ப்பதற்காகப் பணமும் செலவு செய்ய வேண்டாம்.

| | |
|---|---|
| உன் சம்பளத்தை இன்னும் செலுத்தவில்லை. ரூ. 2 இதோடு கூட இருக்கிறது. | இப்படிக்கு, ______________________" |

இக் கடிதத்தில் அடியிற் கையெழுத் தில்லை. ஒரு கோடு தான் கிழிக்கப்பட் டிருந்தது! இக் கடிதத்திலுள்ள வாசக அமைப்பு ஆழ்ந்த பொருள் கொண்டது; மிக முக்கியமானது. 'நான்' என்ற முதல் வார்த்தையை யடுத்து, வரி பிளந்து, 'என் தகப்பனுரைத் தேடிக் கொண்டு' என்று சேர்க்கப்பட்ட சொற்றொடரானது, அத்துவிதம் பேசும் சில வாய் வேதாந்திகட்கு ஓர் நல்ல பாட மாகும். அதாவது, 'நான்' என்ற அகந்தை யுணர்வு இருக்கும் வரையிலும் இறைவனை துவிதத்தில் புகலாகச் சரணடைவதைத் தவிர, கடவுளிருப்பையும் அவரிடம் ஜீவன் கொள்ளும் துவித பக்தி யுணர்வையும் மறுத்தோ பரிகசித்தோ வாதிப்பது தவருகும் என்பதாம். அடுத்து, முதல் வாக்கியத்தில் ஆரம்பிக்கப்பட்ட முதற் சொல்லாகிய 'நான்' என்பது அடுத்த வாக்கியத்திலேயே 'இது' என்று மாறிவிடுகிறது! முடிவில் அந்த 'இது' என்பது கூட மறைந்து, கையெழுத்து மில்லாமற் கடிதம் முடிவடைகின்றது!!

· ஆம், அகங்கார மமகார முள்ளவரை 'நான்' என்று அபிமானிக்கப்பட்ட மானிட சரீரம் ஆண்டவனிடம் அகந்தை மமதை சமர்ப்பணமானவுடனேயே 'இது' என்ற அஃறிணை யன்னியப் பொருளாகிவிடுகின்றது! முடிவில் இறைவனுடன் இரண்டற ஏற்படும் ஐக்கியத்தில் இறைவனைத் தவிர மிச்சம் ஏது? கையெழுத்தும் மறைந்தது இக் கைவல்ய ஸ்திதியையே காட்டுகின்றது!

பழுத்த இஞ் ஞான நிலை பதினாறு வயதிலேயே பளிச்சிடுகிற தன்றோ?

ஸ்ரீ ரமணர் மதுரைப் புகைவண்டி நிலையத்தை யடைந்தார். அவர் உத்தேசமாக எடுத்துச் சென்ற மூன்றுரூபாய்தான் அக் காலத்தில் மதுரையிலிருந்து நேராகத் திருவண்ணாமலை வரையி லுமே யிருந்த சரியான வண்டிச் சத்தம்! ஆனால் என்ன செய் வது! அது தெரியாததால் திண்டிவனத்திற்கே டிக்கட் வாங்கி வண்டியிலேறி அமர்ந்தார். வண்டிப் பிரயாண வழியில் அருகில் உட்கார்ந்திருந்த யாரோ ஓர் இஸ்லாமியப் பெரியவர் வலிய வந்து பேசி, விழுப்புரத்தில் வண்டி மாற வேண்டும் என்ற செய்தியை உணர்த்தினர். அந்த ரூபாய்க்கு விழுப்புரம் வழியே மாம்பழப் பட்டு என்ற ஊர் வரையிலுமே அவரால் வர முடிந்தது. பிறகு புகை வண்டியை விட்டிறங்கி அருணாசலத்தை நோக்கிப் பத்து மைல் நடந்து திருக்கோவிலூரின் அருகிலுள்ள அறையணிநல் லூர் ஆலயம் வந்து சேர்ந்தார். ஆனால் அக் கோவிலில் இரவில் தங்க அனுமதிக்கப் படாததால் அவ்வாலயச் சுயம்பாகியுடன் சென்று கீழூர் வீரட்டேசுவரர் ஆலயம் வந்து சேர்ந்தார். அங்கு குருக்கள் வீரட்டேசுவரருக்குப் பூஜை செய்தபின், பசியுங் களைப்பு முற்றிருந்த பால ரமணர் அவரிடம் கொஞ்சம் கோவிற் பிரசாதந் தரும்படிக் கேட்டார். பார்ப்பனர் மறுத்தார்! இக் காட்சியைக் கண்டிருந்த கோவில் மேளக்காரரொருவர், “ஐயா, என் பங்கு அன்னத்தையாவது இவருக்குக் கொடுங்கள்” என்று பரிந்து கூறினர்!! *மற்றெவ் வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொ ழுகுந் திறத்தைச் செயலிற் காட்டிய அவ் வறவோனது இஷ்டப் படி அன்னம் சிறிது கொடுக்கப் பட்டது! ஸ்ரீரமணர் அன்றிரவை அங்கேயே கழித்து, மறுநாட் காலை, ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி யன்று கீழூரில் முத்துகிருஷ்ண பாகவதர் என்பவரது வீட்டையடைந் தார். அவ் வீட்டில் மதியம் உணவு கொண்டபின், அப்பொழுது தான் தன் காதுகளில் அணிந்திருந்த இரு தங்கக் கடுக்கன்கள் அவரது ஞாபகத்திற்கு வந்தன. உடனே அவற்றைக் கழற்றி அப் பாகவதரிடம் கொடுத்து, ரூபாய் நான்கு பெற்றுக்கொண்டு, அன்றிரவே புகைவண்டி ஏறி, மறுநாளாகிய 1896 ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதம், முதல் தேதி, செவ்வாய்க் கிழமை அதிகாலை யில் தன் இளமையிலிருந்தே இதயத்தில் ஊறியிருந்ததும் தற்,

---

*அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழு கலான் —குறள் 30

போது தன் உள்ளம் முழுதும் கொள்ளை கொண்டு தன்பால் இழுத்து வந்ததுமான ஸ்ரீ அருணாசலத்தை வந்தடைந்தார்!

நேராக அருணாசலேசருடைய ஆலயத்துட் சென்று தன்னை ஒப்படைத்து ஆன்ம சமர்ப்பணம் செய்தார். அப்போது மூலஸ்தானத்தின் கதவுகள் திறந்திருந்தன. அங்கு யாருமே யில்லை. தான் நேரே உள்ளே சென்று ஸ்ரீ அருணாசலேசுவர லிங்கத்தை ஆலிங்கனம் செய்து கொண்டார். அது காறும் அவருடலில் ஓங்கியிருந்த வெப்பந் தணிந்து உடல் குளிர்ந்தது; உயிர் குளிர்ந்தது. ஜீவநதியின் யாத்திரை பரமானந்தக் கடலிற் சங்கமமடைந்தது. உள்ளம் நிறைந்த ஞான நிதியின் பெருமிதத்தோடு வெளியில் வந்தார். இனி, செயற் சுதந்திரம், சொற் சுதந்திரம், நினைக்கும் மனச் சுதந்திரம் ஆகிய மூன்றும் தனதின்றி அருணாசலனுடைய தாகிவிட்டதால், கர்த்துருத்துவ மற்றுப் பரம மௌனியானார். அந் நிலையில் யாரோ ஒருவர் வந்து, 'சுவாமி, முடியெடுக்க வேண்டுமோ?' என்று வினவினர்! இதுவும் அருணாசலன் ஆஜ்ஞை எனக்கொண்டு ரமணர் சம்மதித்தார். நீண்டு, சுருள் சுருளாக நெளிவுற்று, அழகுக் கருங்கொடி போன்றிருந்த பால ரமணரின் தலைமயிர் மழிக்கப்பட்டுத் தலை மொட்டை யாயிற்று. ஜாதிச் சின்னமாகிய பூணூலைக் கழற்றி யெறிந்து, ஆடையிலிருந்து ஒரு கோவணம் மட்டுமே கிழித்து உடுத்திக் கொண்டு, அதில் முடியிடப்பட்டிருந்த மீதிக் கடுக்கன் பணத்துடன் அவ்வாடையையும் தூர வீசினர். வழியில் பாகவதர் வீட்டில் அளிக்கப் பட்டிருந்த பக்ஷணப் பொட்டலமும் நீரில் எறியப்பட்டு விட்டது. முடியெடுத்தபின் அதற்காக நீராடவு மில்லை. ஆனால், திரும்பி அவர் ஆலயத்தை யணுகு முன்பே திடீரென ஒரு மழை பெய்தது! அருணாசலேசன் தன் ஞானச் செல்வ மகனை வான் மாரி பெய்து அவபிரத நீராட்டினன் போலும்! கோயிலுள்ளே வந்து ஆயிரக்கால் மண்டபத்தில் நிஷ்டையி லமர்ந்தார் ரமணர்.

### தவராஜன்

ஆனால் மகான்களின் மகிமை யறியுமா மட மனித உலகம்? துஷ்டர்களும், சில குறும்புச் சிறுர்களும் அவரைப் 'பைத்தியம், ஊமை' என்று கேலி செய்து, கற்களையும் ஓடுகளையும் அவர் மேல் எறிந்து தொந்தரவு கொடுத்தனர். இது உலகில வதரித்த பெரியோர்கட் கெல்லாம் வழக்கமாகக் கிடைக்கும் உபசாரந்தா

னல்லவா? புத்தரும், மகா வீரரும், ஏசு நாதரும் மக்களிடம் இவ்வித மரியாதை பெற்றவர்கள் தாமே! புதிதல்ல. எனவே, ஸ்ரீரமணர் அவைகளுக்கு ஒதுங்கி, அருகிலிருந்த 'பாதாள லிங்கம்' என்பதோர் சுரங்கக் கோவிலினுள் இறங்கினர். பகலிற்கூட நெருங்க, யாரும் பயப்படும்படி இருள் நிறைந்திருந்த அக் குகைக்குள் பாதாளேசனின் பின்புறம் மறைவாக உட்கார்ந்து சமாதியில் ஆழ்ந்தார். நாட்கள் பற்பல சென்றன. ஆகாரம், தண்ணீர் ஒன்றுமே யில்லை. ஆயினும் அவர் சமாதி நிலையிலிருந்து எழவே யில்லை! உடலுலக உணர்வு கடந்து, உள்ள வஸ்துவாகிய மெய்ப்பொருளில் ஏகமாய் நிலைத்த அவருக்கு ஆகாரம் தண்ணீராதிய தேடும் உடற்பசி ஏது? மனப்பசி தான் ஏது ? அசரீர ஞானனந்தத்திற் சொக்கி நிற்கும் அவருக்கு அன்னிய வுலகத் துன்ப உணர்வுந்தான் ஏது? ஒன்றுமே யில்லை!

ஸ்ரீரமணர் உட்கார்ந்திருந்த சதுப்பு மண் தரையில் எறும்பு, கரையான் பூச்சிகள், கொசு, குளவி, பூரான் போன்ற விஷ ஜந்துக்கள் நிரம்பியிருந்தன. அவை அவருடலை அரித்துத் தின்ன ஆரம்பித்தன. தொடையின் அடிப்பாகம் அரிக்கப்பட்டுப் புண்ணுகி இரத்தம் வடிய ஆரம்பித்தது. வடிந்த இரத்தம் கெட்டிப்பட்டுச் சீழாகி, தரையிலிருந்த மண்ணிற் பிசையப்பட்டுப் போய் உடலைத் தரையோடு ஒட்ட வைத்து விட்டது. ஆனல் இவையொன்றும் அவருக்குத் தெரியாது! அவர் இதனுற் பாதிக்கப்படவே யில்லை!! புராணக் கதைகளில் வால்மீகி போன்ற ரிஷிகள் தம் உடலின்மேற் புற்று மூட, தலைமயிரிற் குருவிகள் கூடு கட்டி வாழத் தவத்தில் ஆழ்ந்திருந்தனர் என்று படிக்கின்றோமல்லவா? அவ்வளவு அரிய நிலை ஒன்றும் உண்டென்பது வெறும் கட்டுக் கதையல்ல என்ற உண்மையை உலகுக்குத் தற்காலத்திற் கண் முன்இருந்து காட்டி ஸ்ரீரமணர் மெய்ப்பித்தார்!

பல நாட்களுக்குப் பிறகே இது மக்களுக்குத் தெரிய வந்தது. எவ்வாறெனின், **ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள்** என்ற பெரியார் ஒருவர் அக்காலத்தில் திருவண்ணுமலையில் வசித்து வந்தார். பார்ப்போர் கண்ணுக்குப் பைத்தியம் போற் காணப்பட்ட இவர் உண்மையில் ஒர் அருளாளர். மக்கள் சிலர் இவரது மகிமையை யுணர்ந்து போற்றி வந்தனர். 'பாம்பின் கால் பாம்பறியும்' என்பது பழமொழியல்லவா? ஸ்ரீ ரமணரின் ஞான மகிமையை இவர் நன்கு

ணர்ந்தார். அடிக்கடி பாதாள லிங்கத்துட் சென்று பால ரமண ரைப் பார்த்து வருவார். இவரே ஒருநாள் தனது அன்பர் வேங் கடாசல முதலியார் என்பார் ஒருவரிடம், "உள்ளே ஓர் சின்ன ஸ்வாமி இருக்கிறது; போய்ப் பார்" என்று கூறிவிட்டுச் சென் றார். வேங்கடாசல முதலியாரும் மற்றும் சிலருமாக, பகலிலும் இருள் நிறைந்திருந்ததால், விளக்கேற்றிக் கொண்டு, பாதாள லிங்கக் குகைக்குள் இறங்கினர். உரக்கக் கூப்பிட்டும் அசைவற் றிருந்த ஸ்ரீ ரமணரின் திருமேனியைப் பலவந்தமாகத் தூக்கினர். அந்தோ! தரையோடு ஒட்டிக்கிடந்த உடலின் கீழ்ப்புறம் பெயர்க் கப்பட்டதால் மீண்டும் புண்ணாகி இரத்தம் பெருகிற்று! கண்டு அஞ்சிய அவ் வன்பர்கள் பத்திரமாக ஸ்ரீ ரமணரை வெளியிற் கொண்டு வந்து, அருகிலிருந்த கோபுரம் சுப்பிரமணியர் ஆல யத்தில் மெல்ல அமர வைத்துப் பாதுகாத்து வந்தனர். அப்போ துங் கூட ஸ்ரீ ரமணர் உடல் நினைவு பெறாதவராய் சமாதி நிலையி லேயே இருந்தார்!

உடலுருத் தாங்கி நிற்கும் இறைவன் இவர் என்றறிந்து இவ் விறைபணியில் அன்பர் சிலர் ஆர்வமுடன் ஈடுபட்டனர். என்றைக்காவது ஸ்ரீ ரமணர் கண் விழிக்கும் சமயத்தில் பால், கஞ்சியுணவு, பழம் முதலியவற்றை அவர்கள் ஊட்டுவதுண்டு. உறங்குங் குழந்தை யுணவருந்துவது போல், ஸ்ரீ ரமணரின ஆகார விஸர்ஜனாதிகள் நடந்து வந்தன. கண்களே திறக்கா திருந்த சில நாட்களில் வாயைப் பலவந்தமாகத் திறந்து, திரவ ரூபமாகச் சிறிதாவது உணவை அன்பர்கள் வலிந்தூட்டுவது முண்டு!

அருணாசலேசுவரர் ஆலயத்திற் சில மாதங்கள் இருந்த பிறகு, ஸ்ரீ ரமணர் தன்னைத் தரிசிப்பதற்காக மக்கள் திரண்டு கூடுவதை விரும்பாதவராய், தனிமையை நாடினர். பிறகு ஏகாந் தமாயிருந்த குருமூர்த்தக் கோவிலிலும், அதனை அடுத்த மாந் தோப்பிலும், 1897 ஆம் ஆண்டின் ஆரம்பத்திலிருந்து சுமார் 1½ வருடங்கள் நிஷ்டையிலிருந்தார்.

### அன்னையின் ஆற்றாமை

இஃது இவ்வாறாக, மதுரையில் ஸ்ரீ பகவான் எழுதிவைத்து வந்த கடிதத்தைக் கண்ட தமையனும், சிற்றப்பாவும், உறவின

ரும், தாயார் அழகம்மையும் எங்கெங்கோ தேடித் தேடி அலுத்துப் போயினர். முடிவில், ஸ்ரீ பகவான் தங்கியிருந்த குருமூர்த்தத்தில் அவருக்குப் பணிபுரிந்து வந்த அண்ணாமலைத் தம்பிரான் என்ற ஓர் அன்பர் மூலம் விபரம் அறிந்தனர். அப்போது (1-5-1898ல்) மதுரையில் சுப்பையர் காலமாகி விடவே அவரது சகோதரரான நெல்லையப்பையர் உடனே புறப்பட்டுத் திருவண்ணாமலைக்கு வந்தார். ஆனால் பிள்ளையை எவ்வளவோ வருந்தி யழைத்தும் அவர் ஏமாற்றத்தோடு தான் திரும்ப நேர்ந்தது.

நெல்லையப்பையர் முயற்சி தோல்வியுறவே, அன்னை அழகம்மையாரே தமையன் நாகசாமியுடன் அருணாசலத்திற்கு (1898 டிசம்பரில்)விரைந்து வந்தார். 1898செப்டம்பர்முதலே ஸ்ரீரமணர் அண்ணாமலையின் கிழக்குச் சரிவிலுள்ள பவழக்குன்றிற் சென்று தங்கியிருந்தார். தனயனின் கோலத்தைக் கண்ட தாயின் உள்ளம் பதைத்தது.

"அப்பா, குழந்தாய், மதுரைக்கே வந்துவிடு. நீ இப்படிக் கோவணாண்டியாய்க் கல்லிலும் முள்ளிலுங் கிடக்க, நான் வீட்டிற் சுகமாயிருக்க எப்படியப்பா மனம் வரும்? வேண்டாம்; இனி வைராக்கியம் வேண்டாம்; பிடிவாதம் வேண்டாம்; உன்னைப் பெற்ற வயிறு பற்றிப் பதைக்குதப்பா!" என்று கூறிப் பலவாறு கெஞ்சி யழுதார். நாகசாமியும், "சாதாரணமாகத் தானே சொன்னேன். இப்படி யாகும் என்று நினைக்க வில்லையே!" என்று நொந்து, வேண்டிய மட்டும் சமாதானம் கூறி அழைத்துப் பார்த்தார். பத்து நாட்கள் உடன்தங்கிப் பலவாறு வருந்தி யழைத்தும் பகவானுடைய முகத்தில் யாதொரு விருப்பு வெறுப்புக் குறியும் காணப்படவே யில்லை! மௌனமாகவே இருந்து வந்தார். இப் பரிதாபக் காட்சியைப் பார்க்கச் சகியாத பக்தர்களிற் சிலர், "சுவாமி, அன்னை துக்கத்தால் துடிக்கிறாள். தங்கள் கருத்தை எழுதியாவது காட்டுங்கள்" என்று பிரார்த்தித்து ஓர் எழுதுகோலைப் பகவானிடம் தந்தனர். எழுதினார்:

"அவரவர் பிராரப்தப் பிரகாரம் அதற்கானவன் ஆங்காங்கிருந் தாட்டுவிப்பன். என்றும் நடவாதது என் முயற்சிக்கினும் நடவாது; நடப்ப தென்றடை செய்யினும் நில்லாது. இதுவே திண்ணம். ஆகலின் மௌனமா யிருக்கை நன்று."

என்ன ஞான வுறுதி! விருப்பற்ற, அதோடு வெறுப்புமற்ற வுறுதி !! மலை கலங்கினும் மனங் கலங்காத மாட்சி.

"நிலையின் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினும் மாணப் பெரிது" —குறள் 124

"மலையே வீழினும் நிலைகலங்கிடேல்"
—சம்பந்தர் தேவாரம்

ஸ்ரீ பகவானின் மறுமொழி கண்ட பக்தர்களும் தாயும் என்ன செய்வது? அழகம்மையார் துக்கம் மேலிட்டவராய் ஊர் திரும்பினார்.

மனிதர்களே யன்றிப் பசு பக்ஷியாதி யுயிர்களுங்கூடப் பிற்காலத்தில் பகவானது பரம கருணைக்குப் பாத்திரமானது உலகறிந்த விஷயமாயிருக்க, தாயிடம் மட்டும் பகவான் ஏன் இவ்வாறு நடந்துகொண்டார் என்று பலர் வியப்ப துண் டல்லவா ?

'நான், எனது' என்ற அறியாமை நிறைந்த தாயுள்ளம் அன்று அவரிடம், "நீ என் மகன் ; நான் உன்னைக் காபாற்றுந் தாய். என் இருப்பிடத்திற்கு (மதுரைக்கே) வந்துவிடு" என்று அபிமானத்தைக் காட்டிய வரையிலும், அருட் பெருங் கருணையால் பகவான் அதைமாற்றி அன்னையை உய்விக்க வேண்டாமா? இந்த மகா மௌன விடையாகிய வாளால் அக் கொடிய அபிமானக் கிரந்தியை அறுத்தெரிகின்றார். அன்னையைத் துயரத்தோடு திரும்பச் செய்தது கைவிடுவதற் கல்ல, காப்பாற்றுவதற்கே! பிற்காலத்தில் அன்னை அழகம்மையார் யாவுந் துறந்து, தன் ஞான மகனே கதி என்று வந்தடையுமாறு செய்வதற்கே யாகும். மற்றொருமுறை 1914இல் அன்னை மகனைப் பார்க்க வந்த போது கொடிய ஜுரத்தாற் பிடிக்கப் பட்டார். அச்சமயம் பகவான் நான்கு வெண்பாக்களைப் பாடினார். நோய் தணிந்து அன்னை ஊர் திரும்பினார்.

### ஞானத் தேனை நாடிய வண்டினம்

பிறகு ஸ்ரீரமணர் அண்ணாமலை மேல் இருக்கும் விருபாக்ஷக் குகையில் (1899, பிப்ரவரி மாதம்) வந்து வசிக்கலானார். இக்காலத்தில் தான் ஞானத் தாமரையாக மலர்ந்த பகவானின் உபதேசத் தேனைப் பருக, ஆன்ம தாகங்கொண்ட சீடர்களாகிய வண்டினங்கள் வந்து சூழ்ந்தன. மரம் பழுத்தால் வௌவாலை

வாவென்று கூவி இரந்தழைக்க யாரேனும் வேண்டுமா என்ன ? பகவானது மோன அருட் சந்நிதியே அடியார்களின் ஐயங்களைப் போக்கி ஞான மலர்ச்சி யருளக் கூடிய ஆன்ம சூரியனு யிருந்தது. அப்போது சுமார் இருபது வயதே நிரம்பியிருந்த பாலன் ஸ்ரீ ரமண குருபரன். ஆனுல் அவரிடம் ஆன்மப் பசியெடுத்து வந்து சேர்ந்த சீடர்களோ வயதிலும் படிப்பிலும் மிக முதிர்ந்தவர்கள் !

''குருவோ பாலன், முதியவர் சீடர்,
குருமொழி மௌனம், குலைந்தன வையம்;
வடவா லடியின் மகா விசித்ரம்!
நடந்ததவ் வண்ணம் ரமணசந் நிதியில் !!''

ஸ்ரீ ரமண பிரானிடமிருந்து உபதேசங்களை எழுத்தாலும் பிற்காலத்திற் சொல்லாலும் உலகம் சிறிது பெற முடிந்தது என்ருலும், அவரது மோன சந்நிதியினுலேயே சந்தேகந்தீர்ந்து, கிருதார்த்தர்களான முமுக்ஷுக்கள் எத்தனையோ பேர்.

*''மௌனமுள் ளெழுமொரு மொழியரு ணிலேயே''
-ஸ்ரீ பகவான்.

'மௌனமே பலிதத்தில் தவருத உபதேசம். அதற்கு எழுத்தும் சொல்லும் ஈடே யாகா ; சில சமயம் அவை தடையுங்கூட!' என்பது ஸ்ரீ ரமண வாக்கு !

கி. பி. 1900 ஆம் ஆண்டில் **கம்பீரம் சேஷய்யர்** என்பவர் — ராஜயோக வழியில் முயன்று கொண்டிருந்தவர் — தமது ஐயங்களை ஸ்ரீ ரமணர் சமாதியிலிருந்து கண் விழிக்கும் சமயங்களிற் கேட்பதுண்டு. சிறு துண்டுக் காகிதங்களையும் எழுது கோலையுங் கொடுப்பார். பகவான் அவருக்கு எழுதித் தந்த விடைகளே பிற்காலத்தில் **ஸ்ரீ நடனுனந்தர்** என்னும் ரமண பக்தரால் தொகுக்கப் பெற்று **விசாரசங்கிரகம்** என்ற நூலாயிற்று. பிறகு 1902 ஆம் ஆண்டில் **ஸ்ரீ சிவப்பிரகாசம் பிள்ளை** என்ற அன்பர் இவ்வாறே பகவானிடமிருந்து வினுவிடை வடிவிற் பெற்றதே **"நான் யார்?"** என்னும் நூல். உருவிற் சிறியதே யாயினும் உலகினுக் குய்வு காட்டும் ஆற்றலில் மிகப் பெரிய இந் நூல் இப்போது உலகப் பிரசித்தமாக இருக்கிறது. ஸ்ரீ நடனுனந்தரது ஐய வினுக்களுக்கு ஸ்ரீ பகவானளித்த விடைகளே **"உபதேச மஞ்சரி"** என்னும் நூலாயிற்று.

---

*குருவாசகக் கோவை உரை, பிற்பால்-10

1907, நவம்பர் 18ல் **காவிய கண்ட கணபதி சாஸ்திரிகள்** என்ற ஓர் ஆரியக் கவிஞர் வந்தார். அவர் நல்ல ஆசுகவி. அவரை **கணபதி முனிவர்** என்றும் அவரது சீடர்கள் அழைப்பர். மனங்கொண்ட அளவு மந்திர ஜபம் செய்த தபஸ்வி! பெரிய மேதை. அப்படியிருந்தும் உண்மையான **"தபஸ்"** என்பதென்ன வென்றறிய இயலாதவராய், தனது சந்தேகத்தை நீக்கிக்கொள்ள விரும்பி ஸ்ரீ ரமணரைத் தரிசித்தார். "அருமறை யாவுங் கற்றேன்; அனேக கோடி மந்திர ஜபம் பண்ணினேன்; உண்டி சுருக்கி யுபவாச மிருந்தேன்; ஆயினும் இன்னும் 'தவம்' என்பதின் தாற்பரியம் விளங்க வில்லை; தயைகூர்ந் தருளுக" என்று அவர் பகவானிடம் வேண்டி நின்றார். அதற்கு விடையாக ஸ்ரீ ரமணர் தனதருட் கண்களை அவர் மேல் வீக்ஷித்த வண்ணம் பதினைந்து நிமிடங்கள் இருந்தனர். கணபதி சாஸ்திரி, "இத்தகைய சக்ஷு தீக்ஷையைப் பற்றி நூல்களில் வாசித்திருக்கிறேன். ஆனால் அதன் மூலம் உணர்த்தப்படும் உண்மையைக் கிரஹிக்க எனக்கு ஆற்றலில்லை. தயை கூர்ந்து வாய் திறந்து உரைத்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்து நின்றார். எனவே ஸ்ரீ ரமணர், "நான் நான் என்பது எங்கிருந்து புறப்படுகிறதோ அதைக் கவனித்தால் மனம் அங்கே லீனமாகும்; அதுவே தபஸ்" என்றருளினர். ஆனால் ஸ்ரீ கணபதி சாஸ்திரி "ஜபத்தினால் அந்நிலை அடைய முடியாதா?" என்று கேட்கவே, பகவான், அவருக்கு ஜபத்திலிருக்கும் அபிமானத்தை யறிந்தவராய் "ஒரு மந்திரத்தை ஜபம் பண்ணினால் அந்த மந்திரத்வனி (சப்தம்) எங்கிருந்து புறப்படுகிறது* என்று கவனித்தால், மனம் அங்கே லீனமாகிறது; அது

*மந்திரத்வனி மந்திரத்தை ஜபிப்போனிடமிருந்தே வருகிறதாகையால், மந்திரத்தையோ மந்திரத்வனியையோ கவனிக்கச் சொன்னதன்று இது. ஜபிப்போனாகிய 'நான்'—அகந்தை—எங்கிருந்து உண்டாகின்றது என்ற மூலத்தையேதான் ஸ்ரீ பகவான் இதன் மூலம் நாடச் சொல்கின்றனர்! தான் கவனிக்கப்பட்டால் பதுங்கி, அடங்கி, தன் இருப்பை இழப்பது அகந்தையின் இயற்கை யாதலால் 'யான் அற்று இயல்வது எதுவோ அந்த ஆன்ம நிலையைத் தேருவது தான் நற்றவம்' என்ற உபதேச வுந்தியாரின் முடிவு இங்கு எய்தப் பெறுவது காண்க.

இது போன்றே ஸ்ரீ பகவான் மற்றொரு சமயம் திரு. வெங்கட கிருஷ்ணய்யா என்பவருக்கு காயத்ரீ மந்திரத்தைப் பற்றிக்கூறும் போது "ஜபிப்பவனைக் கவனி" என்று கூறியதும் (Talks No. 606) இங்கு ஒத்து நோக்கற் குரியது.

தான் தபஸ்" என்று உபதேசித்தனர்.

இவ் வுபதேசம் பெற்ற கணபதி முனிவர் 'உத்தம ஞானசிரியனுய், ஸஹஜாத்ம நிஷ்டனுய் விளங்கும் இவர் சாமானியரல்லர். இவரே பகவான் மகரிஷி' என்று பாராட்டித் தமது கவி வாணியால் பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷி என்று துதித்தார். அன்று முதலே இப் பெயர் வழங்க லாயிற்று.

பகவான் ஸ்ரீ ரமணர் ஓர் அரிய அருட்கவி. அவரது தாய் மொழியாகிய தமிழ் மொழியில் அவரது கம்பீரமான செய்யுள் நடை சங்க கால இலக்கிய நடைக்குப் புத்துயிர் ஊட்டுகின்றது. செறிந்த, சிறந்த, பொருட் பொலிவு கொண்ட செந்தமிழ் நடை. தமிழில் உபநிடதம் யாத்த ஞானப் புலவர் பகவான் ஸ்ரீ ரமணர். அது மட்டுமல்ல; ஆரியத்திலும், மலையாளத்திலும், தெலுங்கிலுங் கூடச் சிறந்த கவிஞரா யிருந்தார். தெலுங்கு மொழியில் தமிழ் வெண்பா இலக்கணத்தை முதன் முதலாகக் கையாண்டு காட்டியவர் பகவான்!

ஸ்ரீ ரமண பகவானுற் செய்யுட் செல்வங்களாகத் தமிழன்னைக்குக் கிடைத்த இணையற்ற ஞானரத்தினங்கள் எத்தனையோ உண்டு! ஆயினும் ஸ்ரீ ரமண பகவான் வெறும் நூலாசிரிய ரல்லர். தாம் நூலியற்ற வேண்டும் என்ற சங்கற்பமே அவரிடம் கிடையாது. 1896 ஆம் ஆண்டு அருணசலத்தில் அடிவைத்த நாளிலிருந்து நிச்சங்கற்பமே அவரது நிலை. எனின் ஸ்ரீ ரமணேபதேசங்களாகிய நூல்கள் எவ்வாறு உலகுக்குக் கிடைத்தன? உலகைப் படைத்துக் காத் தழிக்கும் பரமேசுவர சக்தியாகிய கடவுள் ஒன்று உண்டல்லவா? அதுவே அவரது மனேவாக்குக் காயங்களைக் கருவியாகக் கொண்டு, அடியவர்களின் கேள்வி, சந்தேகம், வேண்டுகோள் இவைகளைக் காரணமாகக் கொண்டு,உலகை உய்விக்கும் நிமித்தம் பகவான் ரமணரைப் பாட்டுவித்தது. யாராவது ஏதாவது ஆன்மீக விஷயங்களைக் கேட்டால், இனிய அரிய செந்தமிழ்ப்பாக்கள் விடையாக பகவானிடமிருந்து மலரும். அவ்வாறு சிந்திய உபதேச ரத்தினங்களே தற்போது ஸ்ரீ ரமணேபதேச நூல்களாக உலவுகின்றன! அவையாவும் ஒருங்கு திரட்டப்பட்டு "ஸ்ரீ ரமண நூற்றிரட்டு" என்னும் வடிவில் உருக்

கொண்டுள்ளன. அவைகளுள் மிகவும் முக்கியமானவை தோத்திரமாக ஐந்தும், சாத்திரமாக மூன்றும் ஆகும். தோத்திரம் ஐந்தும் **'ஸ்ரீஅருணாசல ஸ்துதி பஞ்சகம்'** என வழங்கப் படுகின்றது. சாத்திரம் மூன்றும் **உபதேச உந்தியார், உள்ளது நாற்பது, குருவாசகக் கோவை** என்பனவாம்.

உத்தம ரமண பக்தரும் சீரிய செந்தமிழ்ப் புலவருமான **ஸ்ரீ முருகனார்** என்பவரது வேண்டுகோட் கிணங்கிப் பகவான் ஸ்ரீரமணர் 'உபதேசவுந்தியார்' என்னும் நூலை அருளியதோடு, 'உள்ளது நாற்பது' என்னும் ஒப்புயர்வற்ற உபநிடதத்தை யாத்தும் தொகுத்தும் அருளினர். ஸ்ரீ பகவான் ஆதி நாள் தொட்டு அன்றன்றும் திருவாய் மலர்ந்தருளிய வசனங்க ளுள்ளிட்ட உபதேசங்கள் அனைத்தையும் தமிழ்ச் செய்யுட் கோவையாகத் திரட்டி ஸ்ரீமுருகனார் சேகரித்துச் சேமித்த ஸ்ரீரமணோபதேசப் பொக்கிஷமே 'குருவாசகக் கோவை' என்ற நூல். ஸ்ரீ முருகனாரை முன்னிட்டுத் தோன்றிய இம் முப்பெரும் ரமணோபதேச நூல்களே இன்று நிலவும் **ஸ்ரீ ரமணப் பிரஸ்தானத்திரயம்** (முப்பெரு மோக்ஷ நூல்) ஆகும்.

அருணாசல மலையே சிவபிரானது ஆதிலிங்க வடிவு. இம் மலையே சிவன். "இம்மலை முழுவதுமே தெய்வீகமானது. இது சிவனே தான். நாம் நம் உடலை எப்படி 'நான்' என்று அபிமானிக்கிறோமோ அப்படியே சிவபிரான் இம் மலையை 'நான்' என அபிமானிக்கின்றார்! ஞானமே உருக்கொண்டது தான் இவ் வருணாசலம். தன்னைத் தேடி வரும் அடியார்களின் மேல் பெருகும் பெருங்கருணையால்தான் ஊனக் கண்களுக்குப் புலப்படும் இவ் வருண மலையாகச் சிவபிரான் வெளிப்பட் டுள்ளார். அடியார்கள் இம் மலையினருகே வசிப்பதனாலேயே ஆறுதலும் ஞானவழி விளக்கமும் பெறுவர்" என்று ஸ்ரீ பகவான் ஒரு முறை திருவாய் மலர்ந்தருளினர். மகான்கள் நமக்கு வழிகாட்டி, நமக்காக அவ்வழி நடந்துங் காட்டியுள்ளன ரன்றோ! அம் முறையில் பகவான் ஸ்ரீரமணரே அன்பர்களுடன் அடிக்கடி அருணகிரியைப் பிரதக்ஷிணம் செய்த துண்டு. உண்ணாமுலை உமையாளான அம்பிகையே இவ் வருணாசலத்தைப் பிரதக்ஷிணம் செய்து அர்த்த நாரீசுவர பதம் பெற்றனள். ஏன்! இங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளி யுள்ள அருணாசலேசுவரரே பிரதி வருடமும் இரு

முறை அண்ணுமலையை வலம் வருகின்ருர் என்ருல், அருண கிரிப் பிரதக்ஷிண மாண்பை நாம் வரையிட்டுரைப்ப தெங்ஙனம்? † அத்தகைய கிரிப்பிரதக்ஷிண சமயத்தில் தான் ஆதியில் 1914 ஆம் ஆண்டில் ஒருநாள் பகவான் ஸ்ரீ ரமணர் அருணுசல ஸ்துதி பஞ்சக நூலின் முதல் துதியாகிய '**ஸ்ரீ அருணுசல அக்ஷர மணமாலை**' யைப் பாடியருளினர்! நினைக்க முக்தி தருவதான அருணுசலத்தை ஸ்மரிக்க இவ் வக்ஷரமண மாலையைத் தினமும் மனங் கனிந்து ஓதுவதையே மோக்ஷ சாதனமாகப் பல்லாயிரம் ரமண பக்தர்கள் மேற்கொண் டுள்ளனர்.

### அன்னையின் அடைக்கலம்

இப்படிப்பட்ட உலக மகா குருவைப் பெற்றெடுத்தது தமிழகத்தின் பெரும் பாக்கியமாகும். இம் மகாபுருஷரைப் பெற்றெடுத்து, வளர்த்து, உலகுக்குத் தியாகம் செய்த அன்னை அழகம்மையாரின் பேறு இணையற்றதே. இத் தியாகத்தால் அவர் பிற்காலத்திற் பெற்றது பேரின்ப வீட்டுப் பேறேயாக விளைந்தது! உறவுந் துறவும் ஒன்றேயான அதீதாசிரமியாய் வாழ்ந்த பகவான் ஸ்ரீ ரமணரது கருணைக்கு அன்னையும் வசமாஞர்! முடிவாகத் தம் ஊர், உறவு, வீடு, விருப்பு யாவும் அகன்று, ஸ்ரீ ரமண பிரானையே ஞாஞசிரியஞகக் கொண்ட சீடர் குழாத்துள் தாமும் ஒருவராய் 1916 ஆம் ஆண்டில் அன்னை அருணுசலத்திற்கே வந்து சேர்ந்து விட்டார். அவரைப் பின்பற்றித் தம்பி நாகசுந்தரமும் அவ்வாறே வந்துவிட்டார். இவரே பிற்காலம் துறவேற்று **ஸ்ரீ நிரஞ்ஜஞனந்த சுவாமிகள்** என்ற தீக்ஷா நாமம் பூண்டு தற்போதுள்ள ஸ்ரீ ரமணுசிரமத்தின் அமைப்பிற்கும் அபிவிருத்திக்கும் காரணமாக விளங்கினுர். உறவினர் நெருங்கினுற் பந்தம் என வெண்ணிப் பகவான் வேறெங்காவது சென்று விடுவரோ என்றும் சில பக்தர்கள் அக்காலம் எண்ணினர். அன்னை மலையில் வந்து வசிப்பதற்குச் சற்று எதிர்ப்பும் இருந்தது. ஆனுல், இப்போது பகவானிடம் எந்த உறவினரும் நீரிற் படரும் அல்லி போல் ஒட்டிக் கொண்டு மிதக்கலாமே தவிர, உப்புப் போற் கரைந்து கரிப்பேற்ற முடியாதென்ற வுண்மையை அவ் வன்பர்கள் அப்போது உணர

† ஸ்ரீ அருணுசலப் பிரதக்ஷிண மாண்பை மேலும் நன்கறிந்து கொள்ள "சாதனை சாரம்" என்ற நூலின் 451-வது பாடலில் இருந்து 460 வரை வாசிக்கவும்.

வில்லை. எந் நிலையிலும் மனத்துறவுடன் வசிக்கலாம் என்ற ஸஹஜாத்ம ஸ்திதியின் உரத்தை பகவான் இன்று இருந்து காட்டியருளினர்.

அதன் பிறகு மலை மீது இன்னும் உயரமாகவுள்ள ஓர் இடத்தில் ரமணீயமானதோர் இருக்கையை அன்பர்கள் கட்டினர். இதில் ஈடுபட்ட அன்பர்கள் பலருள் **"கந்தசாமி"** என்னும் அடியார் ஒருவரின் தனிப்பெரு முயற்சியே அவ் வாசிரமத்தின் அமைப்பிற்கு முக்கிய காரணமா யிருந்ததை முன்னிட்டு அது **"ஸ்கந்தாசிரமம்"** எனப் பெயர் சூட்டப் பெற்றது. பகவான் அங்கு 1916 லிருந்து 1922 ஆம் ஆண்டின் இறுதி வரை வசித்தனர். அவ் வாண்டின் மே மாதத்தில் அன்னை அழகம்மையார் நோய்வாய்ப் பட்டார். அன்னையின் கடைசித் தருணத்தில் பகவான் தமது யோக சக்தி வாய்ந்த வலக்கரத்தை அன்னையின் இதயத்திலும் இடக்கரத்தை சிரசிலுமாக வைத்த வண்ணம் நெடுநேரம் அன்னையின் அருகில் அமர்ந்திருந்தார். அப்போது அன்னையிடம் மீண்டும் பல ஜன்மங்களைத் தரக் காரணமாயிருந்துவந்த பற்பல பழங்கர்ம வாசனைகளுக்கும் பகவானது திருக்கரத்தின் அருட்சக்திக்குமாகப் பெரும் உட்போர் நடந்து முடிவில் அவ் வாசனைகள் யாவும் ஒடுங்கி யழிந்து, ஜீவன் இதயாகாசத்தில் வந்து பிரம்ம சொரூபமாக ஐக்கிய மாயிற்று. மே மாதம், 19 ஆம் தேதி, வெள்ளிக்கிழமை யன்று இரவு சரீரம் அகன்றது. அன்னை அழகம்மையார் முக்திநிலை யுற்றதை பகவான் ஸ்ரீ ரமணரே குறிப்பிட்டு உணர்த்தினர். அன்னையின் திருமேனி அருணாசலத் தென் சரிவில், பாலீ தீர்த்தக் கரையில் பக்தர்களாற் சமாதி செய்விக்கப் பட்டது. முக்தரான அன்னையின் சமாதிமேல் ஸ்தாபிக்கப்பெற்ற லிங்கமே **ஸ்ரீ மாத்ருபூதேசராக** விளங்குகின்றது. உலகில் பகவானுக் கோர் உடலாலயம் அளித்த அன்னைக்கு ஸ்ரீ நிரஞ்ஜனானந்த சுவாமிகளின் மாத்ரு பக்தி ஓர் உத்தம ஆலயம் அமையச் செய்வித்ததும் பொருத்தமே.

## ஸ்ரீ ரமணாசிரமம்

முதலில் சிறு கீற்றுக் கொட்டகையாக அமைக்கப் பெற்றிருந்த அன்னையின் சமாதிக்கு ஸ்ரீ ரமண பகவான் ஸ்கந்தாசிரமத்திலிருந்து அடிக்கடி வந்து போவதுண்டு. 1922 ஆம்

ஆண்டின் டிசம்பர் மாதம் முதல், திருவருளிச்சைப்படி முடிவாக அங்கேயே வந்து பகவான் நிரந்தரமாகத் தங்கி விட்டனர். நாளடைவில் அன்பர்களும் அங்கேயே வந்து கூடித் தங்கிப் பகவானைத் தரிசிக்க ஆரம்பித்தனர். அதனால் ஸ்ரீரமண பகவானின் இச் சந்நிதி வரவர பற்பல அழகிய கட்டிடங்களாக வளர்ச்சியுற்றுத் தற்போதுள்ள **ஸ்ரீ ரமணாச்சிரமம் ஆயிற்று.**

பரிபூரண சமத்துவமே பகவானது தினசரி வாழ்வாயிருந்தது. நம் நாட்டின் ஏழைகளுள் பரம ஏழை யொருவன் தனது உடலின் தேவையாக எவ்வளவு எளிமையாக உடுத்தியிருப்பானோ அதைவிடக் குறைவான உடையையே—ஒற்றைக் கௌபீனத்தையே—அவர் தமது இறுதி நாள் வரை உடுத்தி வந்தார். உணவிலும் அப்படியே. அனைவருடனும் சமமாக அமர்ந்தே அவர் உண்பார். அனைவர்க்கும் எது பரிமாறப் படுகிறதோ அதை மட்டுமே, அதைவிடக் குறைந்த அளவிலேயே, தாம் ஏற்றுக்கொள்வார். அவரது சந்நிதியில் யார் எதைக் கொண்டு வந்து சமர்ப்பித்தாலும் அது அவ்வப் போதே அனைவர்க்கும் சமமாகப் பங்கிடப்பட்டு விநியோகிக்கப்பட்டு விடும். பசு, நாய், குரங்கு, அணில், மயில் முதலிய சகல ஜந்துக்களுக்கும் அங்கு அத்தகைய சமத்துவமும் சம உரிமையும் வழங்கப்பட்டு வந்தன. **'பசு லக்ஷ்மி'** ஆசிரமத்தின் செல்வ மகள் போல் வாழ்ந்து இறுதியில் பகவானது ஹஸ்த தீக்ஷையுடன் 18—6—1948 இல் முக்தியடைந்தாள்.

பகலும் இரவும் பகவான் ஸ்ரீ ரமணர் வாழ்ந்து வந்த அறையின் கதவுகள் திறந்தே இருக்கும். அகண்ட சிதாகாச வெற்ற வெளியாக விளங்கிய அவருடைய வாழ்வில் மறைவேது? மறைந்திருக்க அவசியம் ஏது? நடு நிசியிலுங்கூட அன்பர்கள் சென்று அவரைத் தரிசிக்கலாம். "...நெஞ்சிற் கரவுடையார் தம்மைக் கரப்பர், கரவார் கரவிலா வுள்ளத்தவர்" என்பது ஆன்றோர் வாக்கன்றோ? அவரது தரிசனம் சகலர்க்கும் சதா காலமும் நிபந்தனையற்ற பாக்கியமாக இருந்தது. ஆசிரமத்தின் ஆதிக்காலத்திற் கள்வர் சிலர் நடு நிசியில் வந்தபோதுங்கூட, பகவான், "உள்ளே வந்து வேண்டியதை எடுத்துப் போகலாமே" என்று வரவேற்பளித்தனரென்றால், அவரது வெற்றவெளி வாழ்வுக்கு வேறென்ன சான்று வேண்டும்?




கள்வர்க்குங் கருணை

1924 ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 26 ஆம் தேதி நள்ளிரவு; மணி 11-30 இருக்கும். சில கீற்றுக் கொட்டகைகளே அப்பொழு திருந்த ஸ்ரீ ரமணாசிரமம். ஆனால் அது பணம் பெருத்த திருமடம் என்றெண்ணிய சில திருடர்கள் அங்கு வந்து புகுந்து ஜன்னல்களை நொறுக்கி அட்டகாசம் செய்தனர். பகவான் ஸ்ரீ ரமணர் படுத்திருந்த அறையில் கூடவே சில அடியார்களும் இருந்தனர். பகவான் திருடர்களை உள்ளே வரச்சொல்லி, அவர்களுக்கு வேண்டியதை இருளிற் பார்த்து எடுத்துக் கொள்வதற்காக ஹரிக்கேன் விளக்கு ஒன்றை ஏற்றித்தரச் செய்தார். "உன் பணமெல்லாம் எங்கே வைத்திருக்கிறாய்?" என்று உறுமினர் கள்வர்கள். "நாங்கள் பிக்ஷை எடுத்துண்ணும் சாதுக்கள்; எங்களிடம் பணம் இல்லை; இங்கேயுள்ள எதை வேண்டுமானாலும் எடுத்துச் செல்லுங்கள்; நாங்கள் வெளியேறிவிடுகிறோம்." என்று பகவான் கூறி, அடியார்களுடன் வெளியில் வந்து உட்கார்ந்தார். வெளியேறும் போது ஒவ்வொருவரையும் திருடர்கள் அடித்தனர். ஸ்ரீ பகவானுக்கும் இடது தொடையில் ஓர் அடி விழுந்தது! "அப்பா, உனக்குத் திருப்தி யாகாவிட்டால் மற்றொரு தொடையிலும் அடி" என்று பரிந்துகூறினார் பகவான்!

கள்வர்க்குங் காட்டிய கருணை அம்மட்டோ! எதிர்த்துத் திருடரைத் தாக்கக் கிளம்பிய இளஞ்சீடர் ஒருவரைப் பகவான் தடுத்து, "அவர்கள் தர்மத்தை அவர்கள் செய்யட்டும்; நாம் சாதுக்கள்; நம் தர்மத்தை நாம் கைவிடக் கூடாது; எதிர்ப்பதால் சம்பவிக்கும் விளைவுக்கு நாளை உலகம் நம்மையே குறைகூறும். நம் பற்கள் நம் நாக்கைக் கடித்து விட்டால் பற்களை உடைத்தா எறிந்து விடுகிறோம்?" என்று சாந்தோபதேசம் செய்தனர்!

"திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்(து)
அறனல்ல செய்யாமை நன்று" - குறள் 157

சில நாட்கள் கழித்து அத் திருடர்களைப் போலீசார் பிடித்துக் கொண்டுவந்து ஸ்ரீ பகவான் முன்னிலையில் நிறுத்தினர். "பகவானே, இவர்களுள் யார் தங்களை அடித்தவன்; காட்டுங்கள்!" என்று போலீசார் வேண்டினர். "நான் யாரை

(முன் ஜன்மத்தில்) அடித்தேனே அவன் தான் என்னை யடித்தான்! அவனை நீர் கண்டு பிடியும்!!" என்று பகவான் கூறி நகைத்தனரே தவிர அக் குற்றவாளியைக் காட்டியே கொடுக்கவில்லை!

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தந்
தகுதியான் வென்று விடல்." —குறள் 158

"இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல்." —குறள் 314

### உலகங் கவர்ந்த உத்தமர்

பைபிளுங் குறளும் பகவத்கீதையும் உபநிஷத்தும் உடல் தாங்கி உலவிய உருவமே பகவான் ரமணர் என்ற உண்மையைக் கொஞ்சங் கொஞ்சமாக உலகின் எல்லா நாட்டு மக்களும் அறிந்து கவர்ந்திழுக்கப்படலாயினர். இந்தியர்-வெள்ளையர். என்ற இன வேறுபாட்டையும், இந்து-கிறிஸ்துவர்-முகம்மதியர்-பௌத்தர்-ஜைனர்-சீக்கியர் என்ற மத வேறுபாட்டையும் மறந்து, மக்கள் பலரும் வெகு தொலைவிலிருந்தும் வந்து, இந்த ஞான வள்ளலை யடுத்துத் தத்தமது மதகுரு இவரே என்று போற்றிப் பணியலாயினர், அவர்களுள் உத்தமப் பக்குவிகளான எத்தனையோ பேர் ஸ்ரீரமண தரிசன மாத்திரத்தாலும், அவரது சந்நிதி விசேஷத்தாலும், அருகிலிருந்து தொண்டாற்றியும், உபதேசங்களைக் கடைப்பிடித் தொழுகியும் மெய்யறிவு விளக்க முற்றனர்.

நம் பாரதத்தின் முன்னாள் ராஷ்டிரபதி, 'பாபு ராஜேந்திரப் பிரசாத்' 1938 ஆம் ஆண்டு மகாத்மா காந்தீஜியின் ஆசிரமத்திற்குச் சென்று, "பாபுஜி, சாந்தியை நாடித் தங்கள் ஆசிரமத்திற்கு வந்துள்ளேன்" என்றார். சாந்தியின் நிலைக்களம் காந்திஜி யறிந்ததே. அதனால் மகாத்மாஜி, "நீர் சாந்தியை விரும்புவீ ராயின் ரமணாசிரமம் போம்; அங்குசென்று ஸ்ரீரமண மஹர்ஷிகளின் சந்நிதியிற் கேள்வி, பேச்சுக்க ளற்றுக் கொஞ்ச நாள் இருந்து வாரும்" என்று கூறி அனுப்பி வைத்தார். அதன்படி ராஜன் பாபு 14-8-1938ல் ஸ்ரீ ரமணாசிரமத்திற்கு வந்தார். உடன் வந்தவர்கள் பகவானிடம் ஏதேதோ ஆன்மீக விஷயங்களை வினவியும், பகவான் தவமிருந்த இடங்களைச்

சுற்றிப் பார்த்தும் வந்தனரேனும், ராஜன்பாபு மட்டும் ஸ்ரீரமண சந்நிதியை விட்டு நகரவே யில்லை! மேலும், காந்தீஜியின் ஆஜ்ஞைப்படியே யாதொரு பேச்சும் கேள்வியும் எழுப்பாமலேயே ஒரு வாரம் முழுதுங் கழித்தார்! அவர் விடைபெறும் போது ஸ்ரீ பகவானை அணுகி, "பகவன், காந்தீஜியே என்னை இங்கு அனுப்பி வைத்தார். அவருக்கு நான் தங்களிடமிருந்து கொண்டு செல்ல ஏதேனும் செய்தி யுளதோ ?" 'என்று வினயமாய் வேண்டி நின்றார்.

"எந்தச் சக்தி இங்கே நடத்திக்கொண்டிருக்கிறதோ, அதுவேதான் அங்கேயும் நடத்தி வருகின்றது! இதயம் இதயத்தோடு பேச, வாய்ச்சொல் எதற்கு?" என்றனர் ஸ்ரீ பகவான்! எங்கும் நிறைந்த பரம் பொருளின் ஏகத்துவ இரகசியத்தை விளக்கும் ஞான மொழிகளே இவை யன்றோ? இங்ஙனம் ஸ்ரீ ரமண பகவானது காலத்தில் வாழ்ந்த புவியரசர்கள், கவியரசர்கள், அறிஞர் திலகங்கள், அரசியல் தலைவர்கள், வேதாந்திகள், துறவிகளாகிய பெரியோர் அனைவரும் பகவானின் ஞான மகிமையைப் போற்றி வந்தனர்!

### உபதேசங்கள் : குறிக்கோளும் வழியும்

பரிபூரண சுகத்தை யடைவதையே பகவான் ஸ்ரீ ரமணர் மனித சமூகத்தின் குறிக்கோளாகக் காட்டிக் கொடுக்கின்றனர். சுகத்தை விரும்பாத ஜீவர் யாரு மில்லை. சகல ஜீவர்களும் தத்தம் சகலவித முயற்சிகளாலும் நாடுவது சுகத்தையே யல்லவா? ஆகையால், ஸ்ரீ பகவானது குறிக்கோளை மறுப்போர் யாருமிலர். இக் காரணத்தாலேயே ஸ்ரீ ரமணோபதேசங்கள் யாதொரு தனிப்பட்ட மதக் கொள்கையு மாகாமல், சகல உயிர்கட்கும் புகலளிக்கும் **பொதுப் பெரு நெறியாக** விளங்குகின்றது. அதனால்தான் உலகின் எந் நாட்டினரும் எம் மதத்தினரும் ஸ்ரீரமணோப தேசங்களை மிக்க விருப்பமுடன் ஏற்றுப் பின் பற்றுகின்றனர்.

சுகம் என்பது யாது? இதைச் சரியாக அறிந்து கொள்ளாததால்தான் மக்கள் சுகத்திற்காகப் பற்பல துறைகளிலும் தம் முயற்சியைச் செலுத்தி வருகின்றனர். சுகம் என்பது ஆன்மாவே. ஆன்மாவின் இயல்பே சுகம். உண்மையில் நாம் ஆன்மாவே. நம் இயல்பு சுகமே. ஆயினும் தாம் ஆன்மாவே

என்றறியாமல் தம்மை உடலாகக் கருதியிருப்பதால்தான் மக்கள் சுகத்தை யிழந்தவர்களாகவும் துன்புறுபவர்களாகவும் அவசியமின்றிக் கவலைப்படுகிருர்கள். இழந்ததாகத் தோன்றும் நம் சுகத்தை மீண்டும் அடைவதற்கு, மறந்ததாகத் தோன்றும் நம் உண்மை யியல்பை—ஆன்மாவை — அறிவதொன்றே போதும்.

'நாம் சுகமடைய முயல்வது சுயநல மல்லவா?' என்று சிலர் கேட்பதுண்டு. 'சுயம்' என்ற பதத்தின் சரியான பொருளைத் தெரிந்து கொள்ளாததால்தான் இக்கேள்வி பல நன்மக்களிடமும் எழுகின்றது. 'சுயம்' என்பது ஆன்மாவே. தன்னை அகண்ட ஆன்மா என்றறியாமல், தன்னைக்குறுக்கி நோக்கி, 'இவ்வுடலே நான்' என்று கருதுவதால்தான் 'சுயநலம்' என்ற சொல் ஓர் கீழ்மைக் குணத்தைக் குறிக்கும் சொல்லாக நம்மிடையே வழங்கி வருகின்றது. "சகல உயிர்களிலும் ஏகமாய் ஒத்து விளங்கும் ஆன்மாவே நான்" என்றறியும் ஆன்ம ஞானி ஒருவனின் அனுபவத்தில் 'சுயநலம்' என்பது சகல உயிர்களின் நலமுமே யாகிற தல்லவா? ஆன்ம ஞானம் உண்டானுல்தான் சகல உயிர்களின் உண்மையும் தானே என்பது விளங்கும். இவ்வாறு தன்னை ஆன்மாவாக உணர்ந்தால் தான் அனைத்துயிர்க்கும்—அனைத்துலகிற்கும்—உண்மையான நன்மை யுண்டாக்கமுடியும். "தன்னைப் போன்று பிறரை நினை" என்று வாய்ப் பேச்சால் மட்டும் பிரசாரம் செய்வதால் உலக உயிர்களிடம் உண்மையான அன்பு நமக்கு உதிக்காது. ஆன்ம ஞானத்தால் உயிர்கள் அனைத்தையும் தன்மையொருமையாய் அனுபவித்துணரும் பொழுதுதான் சகல உயிர்களிடத்தும் நமக்கு அனன்னிய அன்பு சித்திக்கும். இவ் வான்ம சித்தியே உலகில் சாந்தி, சமாதானம், சுகம் இவை நின்று நிலவ ஆணிவேர். ஆகையால் அகங்கார தோஷத்தை நசிப்பிக்கும் ஆன்ம விசார நெறியே தற்போது உலகின் முக்கிய தேவையாகும். உண்மையான ஆன்ம ஞானியே உலகிற்கு உண்மையான உபகாரியு மாவான்! தன்னை அறிந்த மெய்ஞ் ஞானி ஒருவரின் இருப்பே இவ்வுலகத்திற்குப் போதியதான பேருபகாரமு மாகும். எனவே உலகமெலாம் சுகமடையவேண்டும் என்ருல், மனித சமூகத்தின் சரியான குறிக்கோள் ஆன்மாவை யறிவதாகவே அமைய வேண்டும் என்பது விளங்குகின்ற தல்லவா ?

ஆன்ம ஞானத்தால் மட்டுமே உண்மையான பூரண மான சுகத்தை மக்கள் அடைய முடியும். இதை விடுத்துப் பஞ்சேந்திரியங்கள் வழியே உலகப் பொருள்களை அனுபவித்துச் சுகமடைய முயல்வது சரியானதல்ல. ஏனெனில், சுகம் அப் பொருள்களிலிருந்து வருவதில்லை. இவ் வற்ப சுகானுபவங்களுங் கூட அனுபவிக்கப்படும் போது, மனம் தன் விருத்திக ளடங்கி ஆன்மாவில் மூழ்குவதால்தான் அனுபவிக்கப்படுகின்றன. நாம் விரும்பிய பொருள்கள் கிடைக்கும் போதும், நாம் வெறுத்த பொருள்களுக்குக் கேடுண்டாகும் போதும் மனம் உண்முகப்பட்டு ஆன்மாவில் மூழ்கி ஒன்றுவதால் ஆன்மசுகத் தையே அனுபவிக்கின்றது. இந்த உண்மையை அறியாததால் மக்கள் பொருள்களிலிருந்து தமக்குச் சுகம் கிடைப்பதாகத் தவறாகக் கருதி, அந்தப் பொருள்களைத் தேடுவதையே தம் வாழ்வின் குறிக்கோளாக்கி நாள் முழுவதும் அதற்காகவே பாடுபடுகின்றனர். இதுவே அறியாமை அல்லது மாயை.

உலகப் பொருள்களைத் தேடிக் குவித்துப் பஞ்சேந்திரி யங்களின் மூலம் அவற்றை அனுபவித்தடையும் சுகம் மிக அற்பமும் அநித்தியமு மாகின்றதல்லவா? இவ்வாறு அற்ப சுகானுபவியாக நாம் ஆகாமல், பரிபூரண சுகானுபவியாவதே நமக்கு ஸ்ரீ ரமண பகவான் காட்டித் தரும் குறிக்கோள்.

இக் குறிக்கோளை அடைய ஸ்ரீ பகவான் வகுத்தளித்துள்ள வழிகள் இரண்டு. (1) தன்னை 'நான் யார்?' என்று விசாரித் தறியும் ஆன்ம விசாரம். (2) இறைவனிடம் தன்னை முழுவ தும் ஒப்புவித்துவிடும் ஆன்ம சமர்ப்பணம். முந்தியது அறிவு நெறி(ஞான மார்க்கம்). பிந்தியது அன்பு நெறி(பக்தி மார்க்கம்).

**ஆன்மவிசாரம் :—** நாம் எதை யறிய விரும்புகிறோமோ அதை நாடுகிறோம். அவ்வாறே தன்னை யறிய விரும்பினால் தன்னையே நாட வேண்டும்.

ஆனால் உலகிற் காணப்படும் ஆராய்ச்சிகள் முழுவதும் தன்னை விட்டு விட்டு முன்னிலைப் படர்க்கைப் பொருள்க ளாகிய உலகையும் கடவுளையும் ஆராய்வதே யாகு மல்லவா? உலகம் கடவுள் இவைகளை ஆராயும் அறிவாகிய மனிதன் தன்னை யாரென்று சரியாக இன்னும் அறியவில்லை. 'நான் மனிதன்' என்கிறோம். இது அறியாமையே தவிர, தன்மை

யின் உண்மையான அறிவல்ல. ஏனெனில் நமது உடைமை யாகிய உடம்பையே நாம் என்று தவருக எண்ணுவதால் தான் 'நான் மனிதன்' என்கிருேம். உடையவனுகிய நான் யாரென்று உடம்பினின்றும் நம்மைப் பகுத்து அறியும் அறிவே சரியான பகுத்தறிவு. தேகமே நானெனன் றுணரும் அறிவு (அகங்காரம்) போலித் தன்மை யுணர்வே. அகண்ட ஆன் மாவாகத் தன்னை யறிவதே மெய்யான தன்மை யறிவு அல்லது ஆன்ம ஞானம்.

உறக்கத்திலிருந்து உணர்வு எழும்போது 'நான் இவ்வுடல்' என்ற வடிவில் நம்மை உணர்கிருேம். ஆனல் உறக்கத்தில் உடல் உலக உணர்வுகள் இல்லை. 'நான் இருக்கிறேன்' என்ற சுத்தவுணர்வு உறக்கத்தில் உள்ளது. விழிப்பில் இத் தன்னு ணர்வு "நான் உடலாக இருக்கிறேன்; நான் மனிதனுக இருக் கிறேன்; நான் இன்னுராக இருக்கிறேன்" என்றவாறு ஓர் உபாதியைச் சேர்த்துக்கொண்டு எழுகின்றது. இதுவே அகந் தை, ஜீவபோதம்; இதுவே பந்தம். இதுவே முதல் எண்ணம். இந்த முதல் எண்ணமாகிய மனிதனுக்கே முன்னிலை படர்க் கைகளின் உணர்வாகிய பிற எண்ணங்கள் உண்டாகின்றன. முன்னிலை படர்க்கைகளை நாட நாட மேலும் எண்ணங்கள் விருத்தியாகிக் கொண்டே போகும். தன்மை யுணர்வாகிய 'நான் இன்னுராக இருக்கிறேன்' என்ற அகந்தை வடிவத்தை இதன் இருப்பு எத்தகையது என்று நாடவேண்டும்.

"முன்னிலை படர்க்கைக ளாகிய பிற எண்ணங்கள் எழுந் தால் அவற்றைப் பூர்த்தி பண்ணுவதற்கு எத்தனிக்காமல், 'அவை யாருக் குண்டாயின?' என்று விசாரிக்க வேண்டும். எத்தனை எண்ணங்க ளெழினுமென்ன? எண்ணங்களின் மேற் செல்லும் கவனத்தைத் தன்மீதே திருப்ப வேண்டும். திருப் புவது எப்படியெனின், ஒவ்வோ ரெண்ணமுங் கிளம்பும் போதே ஜாக்கிரதையாக, 'இது யாருக் குண்டாயிற்று?' என்று விசாரித்தால், 'எனக்'கென்று தோன்றும். உடனே 'நானுர்?' என்று விசாரித்தால் மனம்—நம் கவனசக்தி—எண் ணங்களை விட்டுத் தன் பிறப்பிடத்திற்குத் (ஆன்மாவிற்குத்) திரும்பி விடும். அதனுல் எழுந்த பிற எண்ணங்களும்—கவ னிப்பா ரற்றதால்—அடங்கி விடும். இப்படிப்பழகப்பழக, மனத் திற்குத் தன் பிறப்பிடத்திற் றங்கி நிற்கும் சக்தி அதிகரிக்

கின்றது. 'நான் யார்?' என்ற ஆராய்ச்சியினுலேயே மனம் அடங்கும். மனமடங்குவதற்கு விசாரணையைத் தவிர வேறு தகுந்த உபாயங்க ளில்லை. பிராணுயாமம், மூர்த்தித் தியானம், மந்திர ஜபம் முதலிய மற்ற உபாயங்களினுல் அடக்கினுல், மனம் அடங்கினுற் போலிருந்து மறுபடியும் கிளம்பி விடும். மனத்தின்கண் எதுவரையில் விஷய வாசனைக ளிருக்கின் றனவோ அதுவரையில் 'நான் யார்?' என்னும் விசாரணையும் வேண்டும். சொரூபத் தியானம் கிளம்பக் கிளம்ப வாசனைகள் யாவு மழிந்து விடும். ஒருவன் தான் சொரூபத்தை அடையும் வரையில் நிரந்தர சொரூப ஸ்மரணையைக் கைப்பற்றுவா ளுயின் அதுவொன்றே போதும். 'நான், நான்' என்று கருதிக் கொண்டிருந்தாலுங் கூட அவ்விடத்தில் கொண்டு போய் விட்டு விடும். சதாகாலமும் மனத்தை (நாட்டத்தை) ஆன்மாவில் (தன்மையுணர்வின் மேல்) வைத்திருப்பதற்குத் தான் 'ஆத்ம விசாரம்' என்று பெயர். பந்தத்திலிருக்கும் தான் யார் என்று விசாரித்து, தன்யதார்த்த சொரூபத்தைத் தெரிந்து கொள்வதே முக்தி" என்கிருர் ஸ்ரீ பகவான்*

'நான்' என்னும் தன்மையுணர்வு எது என்று நாடுவ தற்கு எழுந்த அகம் விருத்தி மற்ற நினைவுகளை யெல்லாம் அழித்து, பிணஞ்சுடு தடிபோல் முடிவில் தானும் அழியும். அதாவது, எல்லா நினைவுகளுக்கும் மூல எண்ண வடிவமான "நான் இன்னுராக இருக்கிறேன்" என்ற கலப்புணர்வில் உள்ள 'இன்னுராக' என்ற உபாதியுணர்வு மட்டும் (அது பொய்யி ருப்பே யாகையால்) கழன்று போய், **'நான் இருக்கிறேன்'** என்ற தன்னிருப்பின் மெய்யுணர்வான ஆன்மாவே மிஞ்சி விளங்கும்.

இவ்வாறு ஜீவோபாதியினின்றும் விடுபட்டு நாம் சுயமே பிரகாசிப்பதே ஜீவன்முக்தி, மோக்ஷம், பரிநிர்வாணம், பரம பதம், கடவுள் நிலை என்றெல்லாம் பற்பல மதங்களிலும் கோஷிக்கப்படுகின்றது. ஜீவபோத ரூப அகந்தை அழியும் இந்நிலையே மரணமற்ற அமரநிலை. அகந்தையை வேரறுக்கும் இந் நிகழ்ச்சியே பக்தி மார்க்கமாகிய ஆன்ம சமர்ப்பணத் திலும் எவ்வாறு நிகழ்கின்றதென்று பார்ப்போம்.

---

* "நான் யார்?" என்ற நூலிற் காண்க.

**ஆன்ம சமர்ப்பணம் :—** ஆன்ம சமர்ப்பணம் என்பது அகங்காரத்தை ஆண்டவனுக்குச் சமர்ப்பிப்பதே என்று தெரிந்துகொள்ள வேண்டும். உண்மையில் ஆன்ம விசாரமும் ஆன்ம சமர்ப்பணமும் (அகந்தையை நசிப்பிப்பதாகிய முடிவு நிலையிலும் சரி, செய் முறையிலும் சரி) இரண்டல்ல; ஒன்றே! கடவுளை நம்புவோர்க்குப் பக்தி மார்க்கமாகிய ஆன்ம சமர்ப் பணம். இந்த 'நான்' என்ற ஜீவனும் உலகமும் உண்மை யில் கடவுளுக்கே உடைமையானவையா யிருக்க, தேகத்தை 'நான்-எனது' என்று உரிமை பாராட்டித் திரிவது ஆண்ட வனுடைய பொருளை அபகரித்த அபசாரச் செயலேயாகும். தேகாபிமானத்தை ஆண்டவனுக்குச் சமர்ப்பித்து விட்டால் நானற்ற நிலை சித்திக்கும். அகங்கார மமகார மற்ற இந் நிலையே ஆன்ம நிலை.

மேலெழுந்த வாரியாக நோக்குவார்க்கு, 'ஆன்விசாரியோ தன்னை நாடுகிறன்; பக்தனே கடவுளை நாடுகிறனே' என்ற வாறு செய்முறையில் ஆன்ம விசாரத்திற்கும் ஆன்ம சமர்ப் பணத்திற்கும் ஓர் வேற்றுமை இருப்பது போலக் காணப் படினும், உண்மையாகவே சாதனையில் ஈடுபடும் சாதகன் ஒரு வனுக்கு, அகந்தை அழிந்து ஆன்மாவாக நிலைபெறுவதாகிய முடிவு நிலையில் மட்டுமன்றிச் செய்முறையிலும் இரண்டும் ஒன்றே யாவது தெற்றென விளங்கும். எவ்வாறெனின், தன்னைக் கடவுளுக்குச் சமர்ப்பிக்கும் சாதனையைத் தொடங்கும் பக்தன் பிறகு தேகத்தை 'நான்' என்றோ 'எனது' என்றோ மீண்டும் பற்றிக்கொள்ளும் அபிமானத்தை ஏற்கவே கூடாது. கடவு ளுக்குக் கொடுத்ததை மீண்டும் எடுத்துக் கொள்ளும் தத்- தாபகாரச் செயலே இது. ஆகையால், மீண்டும் அவைகளை அப கரிக்காமல் இருக்கமுயல்வதே சரணுகதியின் சரியான சாதனை முறை. அப்போது அவன் என்ன செய்கிறன்? 'தேகமே நான்' என்னும் போலித் தன்மையுணர்வு கிளம்பி விடாம லிருப்ப தற்காக, அத் தன்மை யெழுச்சியின் மேல் சர்வ ஜாக்கிரதை யான கவனத்துடன் இருக்க முயல்கிறு னல்லவா? ஆன்ம விசாரி கவனம் செலுத்தும் தன்னுட்டமே இவ்வாறு உண் மையான பக்த னெருவனிடமும் நிகழ்கின்றது!

மேலும் ஒருவன் தன்னைக் கடவுளுக்குச் சமர்ப்பிக்க விரும்பினல், சமர்ப்பிக்கப்பட வேண்டிய பொருளாகிய 'நான்'

என்பது யாது என்று அறிந்து கொள்ள வேண்டியது அவசிய மாகிறது. ஏனெனில், இந்த 'நான்' என்று அவனால் உணரப் படுவது எதுவென்று சரியாக அறிந்து கொள்ளப்படாவிடில், அவன் அதை எப்படிச் சமர்ப்பிக்க முடியும்?

உதாரணமாக, தோல்வியுற்ற போர்வீர னொருவனைக் கைதுசெய்த பின், 'உன்னிடமுள்ள ஆயுதத்தைக் கீழே போடு' என்று கட்டளையிடும் போது, அவன் 'ஆயுதம்' என்று தமிழிற் குறிப்பிடப் படுவது எதுவென்று அறியாத ஓர் பிற மொழியின னாயின்,ஆயுதத்திற்குப் பதில் ஒரு காகிதத்தையே கீழே போடுவா னல்லவா?அது போலவே, பக்திமார்க்கத்தில் ஈடுபட்டு ஆன்ம சமர்ப்பணம் செய்ய விரும்பும் சாதகர் பலரிடமும் இத்தகைய பிழையே காணப்படுகின்றது! அவர்கள் எல்லோரும் தம்மைக் கடவுளுக்குக் கொடுத்துவிட வேண்டும் என் றறிந்திருந்தாலுங் கூட, தான் யார் என்றும், தன்னை அர்ப்பணிப்பது என்றால் என்ன, எப்படி, என்றும் அறியாதவர்களாகவே யிருப்பதால், சம்பூரண சரணாகதி செய்வ தெப்படி என் றறியாது திகைக் கின்றனர். 'நான்' என்பது என்ன என்று சரியாக விசாரித் தறியாதோ ராகையால், அவர்கள் 'எனது' என்ற வடிவில் உணரப்படுகிற உடைமைப் பொருள்களை மட்டுமே கடவுளுக் குச் சமர்ப்பிக்கின்றனர்.

அதாவது, உடையவ னாகிய தன் இயல்புயாது என்று அறியாததால் உடைமையை மட்டுமே அர்ப்பணிக்கின்றனர். ஆகையால், தன் சரணாகதியைச் சம்பூரண மாக்க வேண்டு மாயின், அவர்கள் தன்னை யார் என்று விசாரித் தறிய, கொஞ் சங் கொஞ்சமாகவாவது முற்பட வேண்டும். பிறகுதான் தன்னைச் சம்பூரணமாகச் சமர்ப்பித்து விட முடியும்.

சமர்ப்பிக்கப்பட வேண்டிய 'நான்' என்னும் அகந்தையோ, நாட்டம் தன்மீது செலுத்தப்படுமாயின் பதுங்கி உருமறையுஞ் சுபாவ முடைய தாகையால், ஒருவன் சரியானபடி தன்னை விசாரிப்பானாயின், அவன் சமர்ப்பிக்க விரும்பும் 'நான்' என் னும் அகந்தை இருப்பற் றொழிவதால், இத் தன்னிழப்பால், ஆன்ம சமர்ப்பணமாகிய சரணாகதியும் அவனிடம் சம்பூரண மாகிவிடுகின்றது. பகவானது இக் கருத்தை 'மஹரிஷி வாய் மொழி' என்னும் நூலின் முதற் பாகத்தில், நான்காம் அத்தி யாயத்தில், 24 ஆம் பக்கத்தில், கடைசிப் பாராவிற் காண்க.

இவ்வாறு முன்னிலை படர்க்கைகளை நாடுவதை விட்டு, மனம் தன் மூலத்தை நாடும் விசாரமே சரியான ஆன்ம சமர்ப்பணமும் ஆகின்றது! "ஆன்ம சிந்தனையைத் தவிர வேறு சிந்தனை கிளம்புவதற்குச் சற்று மிடங் கொடாமல் ஆத்ம நிஷ்டாபரனுய் இருப்பதே தன்னை ஈசனுக் களிப்ப தாகும்" என்பது ஸ்ரீ ரமண வாக்கு. கடவுளை பக்தன் வெளியில் தேடுவதும் முன்னிலை நாட்டமே. தன்மையின் உண்மையாய்க் கடவுள் விளங்குவதால் தன்மையை நாடுவதே சரியான கடவுள் நாட்டமான பக்திமார்க்கமு மாகும்.

**விதேக கைவல்யம்.**

பகவான் ஸ்ரீரமணரின் தேக வாழ்வின் இறுதிக்காலம் பிரம்ம ஞானி ஒருவரின் மகிமை எப்படிப்பட்ட தென்பதைக் கையிற் கனியாய்க் காட்ட வல்லதா யிருந்தது. தாம் அருணுசலத்தில் அடிவைத்த நாள் தொட்டு அரை விநாடி கூட அவர் எங்கும் செல்லாமல் ஐம்பத்து நான்கு ஆண்டுகள் அங்கேயே வாழ்ந்திருந்தார். 1949 ஆம் ஆண்டு அவரது இடது புஜத்தின் கீழ்ப்பாகத்தில் 'சர்கோமா' எனப்படும் ஒரு விதப் புற்றுநோய்க் கட்டி புறப்பட்டது. ஆரம்பத்திற் சிறியதாக இருந்த அது இரண்டு முறை அறுவைச் சிகிச்சை செய்யப்பட்ட பிறகும் மீண்டும் பெரியதாக வளர்ந்து உடலின் இரத்தமெல்லாம் உறிஞ்சி ஊற்றாக வெளியிற் பெருக்க ஆரம்பித்தது. ரேடியம் சிகிச்சை போன்ற பல்வேறு வைத்திய முறைகளுங் கையாளப்பட்டன. 19-12-1949ல் நான்காவது முறையாக ஓர் பெரிய அறுவைச் சிகிச்சை நடந்துங் கூட நோய் தணியவில்லை. அவ் வறுவைச் சிகிச்சையின் போது மயக்க மருந்து கூடக் கொடுக்க வேண்டாமென்று ஸ்ரீ பகவான் தடுத்து விட்டார். "வலி யில்லையா?" என்று பக்தர் ஒருவர் பகவானிடமே கேட்டார். அதற்கு விடையாக "வலியும் நமக்கு அன்னிய மல்லவே" என்ருர் பகவான்! நாக்கைக் கடிக்கும் பற்கள் எப்படி நமக்கு அன்னிய மல்லவோ, ரமணரை அடித்த கள்வர்கள் எப்படி அவருக்கு அன்னியமாகத் தோன்ற வில்லையோ, அப்படியே உடலை யுழற்றும் நோயும் வலியுங்கூட **'நானே'** என்ற அனன்னிய ஆத்ம பாவமே அவரது அதிசயிக்கத் தக்க ஞான நிலையாக இருந்தது!

கொடிய வலி தரும் நோயின் இடையிலும் நகைச்சுவை ததும்பும் ஞான மொழிகளால் பகவான் தம் பொருட்டு வருந்

தும் பக்தர்களின் வாட்டத்தை அடிக்கடிப் போக்கி வந்தனர்! “இவ் வுடம்பே நமக்கு வந்த ஒரு நோய்; அந் நோய்க்கு ஒரு நோய் வந்தால் நல்லது தானே நமக்கு!” என்பார். ஒரு பக்தரிடம், “சுவாமி போய்விடப் போகிறுரே என்று வருந்துகிறீர்களோ? எங்கே போவது? எப்படிப் போவது? போக்கு வரவு எதற்கு? தேகத்திற்கே! நமக்கேது?” என்ருர் பகவான்! மற்றொரு முறை, “கொம்பிற் சுற்றப்பட்ட மாலையொன்று நழுவியதையோ அன்றி இருப்பதையோ அறியாத ஒரு பசுவைப் போலவும், தன் உடல் மேலிருந்த ஆடை போயிற்ரு இருக்கிறதா என்றறியாத ஒரு குடி வெறியனைப் போலவும், ஞானியொருவன் தனக்குச் சரீரம் என்று ஒன்று இருக்கிறதா போயிற்ரு என்பதை அறிவதே யில்லை!” என்றும் விளக்கியருளினர்.

இறுதி வரையிலும் மக்கள் தன்னைத் தரிசிப்பதை யாரும் தடைசெய்யக்கூடாது என்று பகவான் திட்டப் படுத்தினர், 1950 ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம், 14 ஆம் தேதி, வெள்ளிக்கிழமை, இரவு மணி 8-47க்கு, உடல் பத்மாசனம் இட்டவாறே அமர்ந்திருக்க, ஒவ்வொரு மூச்சும் சீராகச் சென்று முடிவில் உள்ளே இதயத்தில் ஒடுங்கிற்று. பகவான் ஸ்ரீ ரமணர் தமது நரவேடத்தைக் களைந்து, தமது யதார்த்த சொருபமான போக்கும் வரவுமிலாப் பொது அருள் வெளியாய், ஏதும் மறைப்பின்றி என்றும் பரிபூரணமாய்ப் பிரகாசித்தார்.

விக்கிருதி சித்திரை மேவுங் கிருட்டிணப்
பக்கத் திரயோ தசிதிதியிற்—சுக்கிர
வாரம்பூ ரட்டாதி மாவிதேக கைவல்யம்
சீரமண னுற்ற தினம்.

அச்சமயம் மாத்ரு பூதேசுர ராலய முன்றிலில் அமர்ந்திருந்த பக்தர்கள் சிலர், பகவான் இருந்த அறையின் வாயிலில், பளீரென ஓர் பேரொளி தோன்றி அவ் வறையையும் சுற்றுப் புறத்தையும் வியாபித்துப் பரவியதைக் கண்டனர். இது ஏதேனும் புகைப்பட மெடுக்கும் வெள்ளொளியா யிருக்கலாமோ வென ஐயுறு முன்பே அதே சமயத்தில், அருகில் வெட்ட வெளியிற் கூடியிருந்த மக்கள் ஆகாயத்தைச் சுட்டிக் காட்டி, “இதோ ஜோதி; ஜோதி போகின்றது!” என்று கூவினர். வான வீதியில் அவ் வெண் ஜோதி தோன்றி மெல்ல

மெல்ல வடக்கு நோக்கி நகர்ந்து சென்று, ஸ்ரீ அருணாசலத்தின் உச்சிக்குப் பின் மறைந்தது! ஸ்ரீரமணமா ஜோதி வாழ்க!

பகவான் ஸ்ரீரமண மஹரிஷிகளின் திருமேனியை ரமணாசிரமத்தில் அப் பெருமான் வாழ்ந்திருந்த அறைக்கும், அன்னையின் ஆலயத்திற்கும் இடையிற் சமாதி செய்வித்து **ஸ்ரீரமண லிங்க மூர்த்தி**யைப் பிரதிஷ்டை செய்வித்தனர். அதன்மேல் அழகிய மணி மண்டபாலயம் ஒன்று நிருமாணிக்கப் பெற்று 18-6-1967 ஆம் ஆண்டில் மகாகும்பாபிஷேகம் செய்யப்பட்டது. அச் சந்நிதியின் முன் பாகத்தில் உற்சவாதிகள் நடைபெறுவதற்கான ஓர் பெரிய சபா மண்டபமும் அமைக்கப்பட்டது. "தான் இவ் வுடலல்ல; உள்ள பரம் பொருளே தான்" என்ற மகானுபவியான பகவான் **ஸ்ரீஅருணாசல ரமணரது** அருட் சந்நிதி, ஞான தாகமெடுத்த உலகிற்கு மோனமாக என்றென்றும் அருளமுதம் ஊட்டி வருகின்றது!

வாழிஸ்ரீ ரமண ஜோதி வள்ளலே வாழி வாழி
வாழிநீ கால மூன்றின் வரையறை கடந்தோய் வாழி
வாழிநீ புவனகோடி வடிவெலா நிறைந்தோய் வாழி
வாழிநீ யூழி வெள்ள மதிற்கெடா வங்கம் வாழி.

வாழிஸ்ரீ ரமண ஞான வாரிதி வாழி வாழி
வாழிஸ்ரீ ரமண நாம மந்திரம் வாழி வாழி
வாழிஸ்ரீ ரமண மூர்த்தி வாழியென் பார்நீ டூழி
வாழிநீ எம்மைக் காக்கு மகாகுரு ரமண வாழி!

ஸ்ரீ ரமண சரிதச் சுருக்கம் முற்றிற்று

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி !

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ ரமண வழி

### முதற் பாகம்

**காப்பு**

ஆண்டா னளித்த வருளுபதே சப்பொருளை
யீண்டே விளக்கி யெழுதவருள்—வேண்டும்
வரைமேன் மறைமுனி வாக்கை வரையைங்
கரநின் கழலுதவிக் கா.

### அத்தியாயம்-1.

## உலகின் நோக்கம் ஒழியா வின்பமே

உலகம் அறிவால் முன்னேறுகிறது. அறிவின் விளக்கமே உலகிற் காணப்படும் சிறப்புக்கள். உலகம் எதை நோக்கி முன்னேறுகிறது? உலகத்திற்கு என்ன வேண்டும்? ஊன்றிக் கவனித்தால், உலக ஜீவர்கள் அனைவரும் சுகத்தை யடையவே பாடுபடுகிறார்கள் என்பது தெரியவரும். எறும்பு முதல் ஏகாதிபத்தியக்காரர்களாகிய சக்கரவர்த்திகள் வரை அனைவரும் உழைக்கின்றனர். எதற்காக? சுகத்திற்காகவே. ஒவ்வொருவருக்கும் தற்போது தனக்குள்ள நிலையைவிட சுககரமான ஒரு நிலை வேண்டுமென்ற ஆவல் இருக்கிறது. அவ் வாவலே இவ் வுழைப்புக்குக் காரணம். இது தப்பல்ல; நல்லதே! மனிதனுக்கு மேன்மேலும் சுகமாயிருக்க விருப்ப முண்டாவதால், அவனுக்குத் தற்போது சுகமானது முழுவதும் கிடைக்கவில்லையென்றே தெரிகிறது. ஒருவன் மிகப்பாடு பட்டு உழைத்து, வாழ்வுக்கு வேண்டிய, உணவு, வீடு, மனைவி, மக்கள், உத்தியோகம் போன்ற பல சுக சாதனங்களை விருத்தி செய்கிறான். ஏனெனில் அவைகளிலிருந்து தனக்குச் சுகமுண்டாகும் என்பதற்காகவே அப்படிச் செய்கிறான்.

இவ்வாறு மனிதன் தேடும் சுகமானது அவனால் அனுபவிக்கப்படுகிறது. ஆனால் அது நீடித்து நிற்பதில்லை. கொஞ்ச

நேரமே சுகம்போல் தோன்றி, பிறகு அது விலகிவிடுகிறது. ஒரு மனிதன் தன் வாழ்வில் சுகம் அனுபவிக்கும் பற்பல வழிகளையும் ஆராய்ந்தால்,பொதுவாக ஒரு முடிவுக்கு வரலாம். அதாவது, மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய இவ் வைந்து கருவிகளால் அனுபவிக்கப் படுவதே இப்போது மனிதன் கண்டுள்ள சுகம். இவ் வைம் பொறிகளுக்கும் வேண்டியவற்றைத் தேடுவதே, இன்று வரை மனித சமூகத்தின் பேருழைப்பாக இருந்து வருகிறது.

கண்ணுக்கு இனியதைப் பார்க்கும்போது மனிதன் ஆனந்தமடைகிறான். அக் காட்சி நீங்கினால் துக்கமடைகிறான். காதுக்கு இனிய ஓசையையோ, பேச்சையோ கேட்கும்போது ஆனந்தத்தையும், அது நீங்குவதால் துக்கத்தையும் அடைகிறான். காட்சி, கேள்வி இவைகளைப் போலவே ஸ்பரிசம் (தொட்டுணர்வது), ருசி, மணம் (வாசனை) ஆகியவைகளையும் சுக வடிவாகவும், துக்க வடிவாகவும் மனிதன் அனுபவிக்கிறான். பஞ்சேந்திரியங்கள் என்று சொல்லப்படும் இக் கருவிகள் ஐந்தும் மனிதனுக்குச் சுகத்தைக் கூட்டி வைப்பதாகத் தோன்றினாலும், அவைகள் எப்போதும் இடைவிடாமல் சுகம் தருவதில்லை.

'சினிமா' போன்ற காட்சிகளை அளவுக்கு மீறிப் பார்த்தால், கண் கெட்டுப்போய் நோயுண்டாகிறது. மற்றவிதக் கண் காட்சிகளும் எப்போதும் கண்டுகொண்டே யிருக்க முடியாமல், ஒரு முடிவுக்கு வந்துவிடுகின்றன. காதின் இனிமையும் இவ்விதமே. எவ்வளவு நேரந்தான் ஒருவன் சங்கீதங் கேட்க முடியும்? சங்கீதம் முடிந்துவிடும்; அல்லது இம் மனிதன் வேறு காரணங்களால் அதைவிட்டுப் போகவேண்டி வரும். ஆகவே காதால் அனுபவிக்கப்படும் சுகத்திற்கும் முடிவுண்டாகிறது. மூக்கின் வாசனையும் இப்படியே. அதிகமான வாசனைகளை நுகர்ந்தால் தலை வலியோ அல்லது மூக்கில் இரத்தமோ வந்துவிடும். அன்றியும் அவ் வாசனை தரும் பொருள்கள் சீக்கிரம் அதை இழந்தும் விடும். ருசியும் அப்படியே. நாக்கால் எவ்வளவுதான் ருசியாகப் புசிக்க முடியும்? வயிறு நிரம்பி விட்டால் பிறகு முடியாது; அல்லது அதிக ருசியானால் நாவிலேயே ஒரு தெவிட்டுதல் ஏற்பட்டுவிடும். ஆகவே ருசியும் நீடித்த சுகம் தருவதில்லை. ஸ்பரிசத்தால் சுக மடைவதும் இப்படியே. ஒரு மிருதுவான புஷ்பம் தன்மீது படும்போது ஆனந்த முண்டாகிறது. ஆனால் அது வாடிப்போகும்; அல்லது

கொஞ்ச நேரத்தில் அவ் வுணர்ச்சி சகஜமாகி விட்டால் சுக மில்லாமற் போகும். தென்றல் முதலியவைகளும் இப்படியே. ஆகவே ஸ்பரிச சுகமும் நீடித்து நில்லாது. பஞ்சேந்திரிய சுகங்களில் எவ்வொன்றையும் நாம் நீடித்து அனுபவிக்க இய லாது. அளவுக்கு மீறினுல், சுகத்திற்குப் பதிலாக அவை துக்கத் தையும் தந்துவிடும். எனவே மனிதன் தேடும் சுகமானது ஐம்பொறிகளால் பூரணமாக (நிறைய) சாசுவதமாக அவனுக் குக் கிடைப்பதில்லை என்பதே இவ் வாராய்ச்சியின் பயன்.

கொஞ்சங்கூடத் துக்கம் கலக்காத முழுச் சுகத்தையே மனிதன் எவனும் விரும்புகிருன் என்பது திண்ணம். இதை மறுக்க முடியாது. ஆனுல் அவ்வித சுகத்தை இது வரை எந்த மனிதனும் அடையவில்லை. அதாவது, பஞ்சேந்திரியங்களைத் த்ருப்தி செய்யும் முறையால் அதை எவனும் அடையவில்லை. அம் முறையில் இதுவரை உலகம் உழைத்து முன்னேறியதால் முழுச்சுகம் அடையப்படவில்லை யென்பது நன்கு விளங்கி விட்டது. ஆனுல் அப்படிப்பட்ட சுகத்தை அடைய முடியாதா? முடியும்! துக்கக் கலப்பற்றதும், எப்போதும் நீங்காததுமாகிய (முழுச் சுகமாகிய) பெரிய இன்ப மொன்றை அடைய வேண்டு மென்று உயிர்கள் விரும்புவது தப்பல்ல! **சுக இச்சை தப்பல்ல! அது அடையப்பட வேண்டியதே!! அதுவே புருஷார்த்தம்!!!** ஆனுல் அதற்கு இந்நாள் வரையில் மனிதர்கள் நிருமாணித்து நடத்தி வரும் திட்டந்தான் தப்பாக விருக்கிறது. அதனுல்தான் மனிதன் எவ்வளவுதான் உழைத்தும் அந்தப் பூரண சுகத்தை அடைய வில்லை.

இவ்விதம் சகல ஜீவர்களும் விரும்பும் பரிபூரண சுகத் திற்கு அழைத்துச் செல்லும் மார்க்கங்களே உலகில் தோன்றி யுள்ள மதங்களாகும். 'மதம்' என்ருல் (மதிக்கப்பட்ட) கொள் கைகள் அல்லது வழிகள் என்று பொருள் படும். "மதியுள்ள காறு மதமுண்டாம்" என்பது குருவாசகக் கோவை பாடல் 943. எந்த வழியில் முயன்ருல் பூரண சுகத்தை யடையலாம் என்பதைக் காட்டிக் கொடுப்பதே மதங்களின் வேலை. ஆனுல் தற்காலத்தில் பற்பல மதங்கள் தத்தம் கொள்கைகளை மக்க ளுக்குப் புகட்டி வந்துங்கூட, மனிதன் மதாபிமானம் என்ற ஒரு வெறி மயக்கத்தாலும், மதங்களின் உண்மையைச் சரி யாகப் புரிந்து கொள்ள வியலாத அறியாமையாலும், எம்

மதத்தை அனுஷ்டிப்பவனு யிருந்தாலும், அவன் அந்தப் பரிபூரண சுகநிலையைப் போய் அடையாமல், இடை வழியிலேயே தடுக்கப்பட்டு விடுகிருன்.

எந்தமத மீதி லிருக்கினுநம் பிக்கையுனக்
கந்தமத மெய்யன்போ டாசரித்தி—சொந்தமத
மீதபிமா னத்தால் வெளியிற் பிறமதமேல்
வாதமிடா துள்ளே மறிந்து.

குருவாசகக் கோவை- 991

இந்த நிலையில் மனித சமூகத்துக்கு ஓர் தக்க வழி காட்டி தேவையா யிருக்கின்றது. அத்தகைய வழிகாட்டிகளான பெரியோர்கள் பொதுவாக அவதார புருஷர்கள் என்று மக்களாற் போற்றப்படுகின்றனர். அவர்கள் புருஷார்த்தமாகிய (மனிதனுகப் பிறந்தவன் அடைய வேண்டியதான) அந்தப் பரிபூரண சுகத்தை அடைந்து தெளிந்தவர்கள். மேலும் அச் சுகத்திலேயே என்று மியல்பா யிருப்பவர்கள். அதை யடையப் பிறருக்கும் உதவுபவர்கள். அப்படிப்பட்ட குருமார்களில் ஸ்ரீ அருணுசலத்தின் தென்சாரலில் எழுந்தருளி ஜகத் குருவாய் விளங்கிய பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகளே நமக்கு வெகு சமீப காலத்திய ஞானகுருவாவர். ஸ்ரீ ரமண பகவானுல் உலக மக்களுக்குப் போதிக்கப்பட்டது என்ன? அவரிடமிருந்து உலகம் அடையத்தக்க உயர் நலன் யாது? ஆராய்வோம்.

யுகயுகமாக மக்கள் அறிவால் பல்வேறு துறைகளிலும் முயலும் முயற்சி எதற்காக? சுகத்திற்காக வன்றே? அந்தச் சுகத்திற்கு, இதுவரை தோன்றிய பெரியோர்கள் வகுத்த வழிகள் எல்லாவற்றின் சாராம்சமாகவும், தாமாகவே கண்டு பிடித்ததாகவு முள்ள ஓர் நேர்மார்க்கத்தை பகவான் நமக்குக் காட்டுகிருர். அது ஒரு நேர்க்கோண முக்கோணத்திற் குறுக்குக்கோடு போல (hypotenuse of a right-angled triangle) நேர் மார்க்கமாகவும், அனுஷ்டிப்பதற்குச் சுலபமாகவும் இருப்பதை நம் இவ் வாராய்ச்சியின் முடிவாக அறிய முடியும். அதைக் கவனிப்போம்.

பகவான் ஸ்ரீ ரமணர் காட்டுகின்ற இச் சுகவழியை யார் கடைப் பிடிக்கத் தகுந்தவர்கள். பிராம்மணர்கள்தான் அனுஷ்டிக்கலாமா? அல்லது இந்துக்கள் மட்டுந்தான் கடைப் பிடிக்கலாமா? பகவான் ஸ்ரீ ரமணர் ஓர் இந்துமத குருவா? அல்லது

அவர் உலகில் இதற்கு முன் தோன்றியுள்ள எந்த ஒரு தனிப்பட்ட மதத்தின் கொள்கையையாவது உபதேசிப்பவரா? இவ்வாறெல்லாம் மக்களுக்குக் கேள்வி யெழுவதுண்டு. விடை யாவது :—

சுகத்தை விரும்புகின்றவர்கள் யாரா யிருந்தாலும் சரி, அவர்கள் ஸ்ரீ ரமண வழியைப் பின் பற்றலாம். மனிதர்களுள் சுகத்தை விரும்பாதவர்கள் யாராவ துண்டா? மதங்களிற் கூறப்பட்டுள்ள உயர்ந்த குறிக்கோள் கடவுள் எனப்படுவது. அந்தக் கடவுளை "இல்லை" என்று கூறுவோர் கூட, தமக்குச் சுகம் வேண்டாம் என்று கூற மாட்டார்கள். ஆகவே **நிரீசுவர வாதிகளுங்கூட ஸ்ரீ ரமண வழியால் பரிபூரண சுகமாகிய பயனை யடையலாம்.** மனித தேகம் பெற்ற எவனும் இதற்கு விலக்கல்ல. ஸ்ரீ ரமணர் ஓர் மதகுரு வல்ல. உலகப் பொது நோக்க மாகிய பூரண சுகமடையும் வழியைப் போதிப்பதால் அவர் உலக குரு. உலகிலுள்ள எம்மதச் சம்பிரதாயங்களாலும் தாம் கட்டுப்பா டுறுமல் சகல மனிதர்களுக்கும் பூரண சுகமடையும் வழி யைப் போதிப்பதால் **அவரே உலக மஹா குரு.** அவரிடம் எல்லா மதத்தினரும் வந்து பயனடைந் திருக்கின்றனர். ஒவ்வொரு மதத்தினரும் அவரை "எங்கள் மதகுரு இவரே!" என்று அந்தரங்கத்தில் உணர்ந்து பக்தி செய்கின்றனர். எனவே ஸ்ரீ ரமண மார்க்கம் அல்லது ஸ்ரீ ரமண வழியை யாதெனக் கவனிப்போம்.

அத்தியாயம்-2.

# எது சுகம் ?

மனிதா! நீ சுகத்தை யடைய விரும்புகிருயா? நீ அதற்காக முயற்சிக்கிருயா? அல்லது நீ அதற்கு முயற்சி செய்யத் தகுந்ததொரு வழி வேண்டுமென்ருவது ஆசைப்படுகின்ருயா? அப்படியாயின், நீயே பாக்கியவான்! நீ வாழ்வாய்! வா, வா! இந்த வழியை ஆராய்ந்து பார். இதன் முடிவில் பூரண சுகமடைய முடியுமென்று உனக்கு நம்பிக்கை பிறக்கிறதாவென்று பார். உனக்குச் சரி யென்று தோன்றிஞல் கடைப்பிடி; விடாது உழை: பயனைப் பூரணமாக அடை. பல்வேறு மத நூல்களிஞல் தோற்றுவிக்கப்படும் சகல சந்தேகங்களையும் அறவே நீக்கக்கூடியதாகிய—பூரண சுக வழியாகிய—இதைக் கேள். உலகுக்கு இன்று ஸ்ரீ ரமணபிரா னறைந்த ஞான முரசின் முழக்கத்தைக் கேள்:

அண்ணு மலைநின் றறிவு முரசொலியை
விண்ணே யதிர, விழியார் விழித்துண்மைக்
கண்ணே திறக்கக் கருணையால் தானறைந்திம்
மண்ணே ரமண மகாவடிவில் வந்தருளித்
தண்ணுர் விழியால் தடுத்தாளும் சற்குருவைப்
பெண்ணே யறிந்துநீ பேரின்ப முற்றுயர்வான்
பண்ணுல் எழுப்பிஞேம் பாராய்; பகவனருள்
உண்ணுய்; இனியும் உறங்கேலோ ரெம்பாவாய் ''

— ஸ்ரீ ரமண வெம்பாவை-6

'சுகம், சுகம்!, சுகம் வேண்டும், வேண்டும்!' என்று அலைகிருயே! உழைக்கிருயே! உனக்குச் 'சுகம்' என்ருல் என்னவென்று தெரியுமா? சொல்! எது சுகம்? எவ்வளவோ காலமாக நீ எத்தனையோ விதமான சுகங்களை அனுபவித்திருக்கிருயல்லவா? இப்போது சொல் 'சுகம்' என்ருல் என்ன வென்று! பஞ்சேந்திரியங்களின் மூலம் உனக்கு அனுகூலமாகக் கிடைக்கும் அனுபவங்களையே 'சுகம்' என்கிருய். பஞ்சேந்திரியங்களின் மூலம் உனக்குப் பிரதிகூலமாகக் (பிடிக்காததாகக்) கிடைக்கும் அனுபவங்களையே 'துக்கம்' என்கிருய்! அல்லவா? **இவ்வாறு நீ சுக-துக்கத்தைப் பற்றி மேற்கொண்டிருக்கும் கொள்கை — கருத்து—தவருனது !** ஆகையால்தான் அந்தச்

சுகத்தை அடையவும், துக்கத்தை விலக்கவும்—உன் கொள்கையின்படி—நீ முயற்சித்த வழிகளெல்லாம் தவருகிவிட்டன. வழி தவருகையால்தான் சுகமும் துக்கக் கலப்பின்றி உன்னுல் அடையப்படவில்லே. 'சுகம்-துக்கம்' என்பதைப் பற்றிய உன் கருத்து தவறு என்று சொன்னுல், 'ஏன் தவறு?' என்று காரணம் காட்டி விளக்க வேண்டாமா? பிறகு 'எதுதான் சுகம்?' என்று தீர்மானிக்க வேண்டாமா? அதைக் கேள்!

உன் கருத்துப்படி, ஐம்புலன் (பொறி)களின் அனுபவத்திற்கு வேண்டிய பொருள்கள் கிடைத்திருக்கும்போது சுகமும், அவை இல்லாத போது துக்கமு மல்லவா இருக்க வேண்டும்? பார்! நீ தூங்கும்போது சுகமனுபவிக்கிருய். அங்கு ஐம்புலன்களின் அனுபவம் ஒன்றுகூட இல்லேயே! ஆனுல் தூக்கம் (கனவற்ற தூக்கம்) எல்லோருக்கும் சுகமாகவேதான் இருக்கிறது; ஐம்புலன்கள் வேலே செய்யாத போது (உன் கொள்கைப்படி) துக்க மல்லவா இருக்க வேண்டும்? அப்படியில்லேயே! அதற்கு மாருக, உடலுணர்வு (அல்லது ஐம்புல அனுபவம்) இல்லாத போது சுகமாக வல்லவா இருக்கிறது! இதற்கு என்ன சொல்வாய்! ஆகவே பஞ்சேந்திரியங்களின் உதவி இல்லாமலேயே சுகம் அனுபவிக்க முடியும் என்பதை நீ ஒத்துக்கொண்டே யாகவேண்டும்.

மேலும், உன் கொள்கைப்படி பார்த்தால், 'சுக சாதனங்கள்' என்று நீ கூறுகின்ற பொருட் செல்வம், மனே, உறவு, உடை, பெண், ஆண், புத்திரன், உறவினர், பண்டங்கள் முதலிய பஞ்சேந்திரியங்களால் அனுபவிக்கப்படுகிற பொருள்களே நிறையச் சேர்த்துக் குவித்த ஒருவன் துக்கமற் றல்லவா இருக்க வேண்டும்? அவைகளேக் கொஞ்சமாகப் பெற்றவனே, அல்லது அறவே இல்லாதவனே துக்கமல்லவா அடைய வேண்டும்? ஆனுல் உலகிற் பார்க்குமிடத்து அவ்வித மில்லேயே! எவ்வளவு பெரிய பணக்காரனுக்கும் துக்கம் அதிகமாகவே இருக்கிறது! சில சமயம் அவனுக்குச் சுகமாகத் தூக்கம்கூட வருவதில்லே. விரல் பெரிதாகவுள்ள அளவிற்கு வீக்கமும் பெரிதாகத்தான் ஆகிறது! சொத்தின்றி, நாள் முழுவதும் உழைத்துவிட்டு, இரவில் உண்டு, தெருத் திண்ணேயில் உருண்டு கிடக்கும் ஏழை யொருவன் கவலேயற்றுத் தூங்குகிருனே! இவைகளே யெல்லாம்விட முக்கியமாக நீ கவனிக்க வேண்டியது

ஒன்றுண்டு. தூக்கம் வரும்போது அந்தப் பணக்காரன்கூட, தன் சுகசாதனப்பொருள்களை விட்டுவிட்டே தூக்கத்தில் லயித்து விடுகிறானல்லவா? அவைகளை விட்டுவிட்டும் அவன் சுகமாகத் தானே இருக்கிறான்! ஆகவே, 'சுகம் பஞ்சேந்திரிய அனுபவங்கள் இல்லாமலேயே பிரகாசிக்கக் கூடிய ஒன்று' என்பதை நீ ஒத்துக்கொள்ள வேண்டியவனாகிறாய். அது மட்டுமல்ல; வெளியுலக உணர் வற்று நீ தூங்கும்போதும் சுகம் அனுபவிக்கப் படுவதால், 'சுகம் உன் னுள்ளேயே இருக்கிறது' என்றுதான் கூற வேண்டி வருகிறது. அதை வெளிப் பொருள்களிலிருந்து வருவதாக நீ இத்தனை காலமாக எண்ணி யிருந்தது தவறு என்று தெரிகிறது. இவ் வுடல் உள்பட யாவும் உனக்கு வேறாக வெளியிலிருக்கும் உலகப் பொருள்களே. தூக்கத்தில் உடல் உள்பட யாவும் மறைந்துபோக, அப்போதும் சுகம் யாருக்கும் அனுபவ மாவதால், உள்ளேதான் சுகம் உள்ளதென்று முடிவாகிறது. உண்மை என்ன வென்றால், **நீயே சுகமயம்! சுகமே உன் வடிவம்! உன் உடல் வடிவம் நீ யல்ல! பரிபூரண சுகமே நீ !**

இந்த முடிவுக்கு வேறொரு வழியாகவும் வந்து சேரலாம். இதைக் கவனி!

நீ பல்வேறு பொருள்களைப் பிரியப்படுகிறா யல்லவா? உனக்கு எதனெதன்மேல் பிரியம் உண்டாகிறதோ அதையெல்லாம் சற்று ஆராய்ந்து பார். பார்த்தால், எதிலிருந் தெல்லாம் உனக்குச் சுகம் வருகிறதாகக் கருதுகிறாயோ அதிலெல்லாம்தான் பிரியம் உண்டாகிறது என்று தெரிய வரும். **இது பொது விதி; விலக்கற்ற விதி! எங்கே சுகமோ அங்கேதான் பிரியம்!!** இதன்படி, உனக்கு எதன்மேல் அதிகப் பிரியம் என்று ஆராய்ந்து சொல். உன் பந்துக்கள். நண்பர், மனைவி, புருஷன், மகன், தாய், தந்தை, வீடு, செல்வம் எல்லாவற்றையும்விட, உண்மையில் உனக்கு உன்மேல் தான் அதிகப் பிரியம் இருக்கிறது என்றே சொல்ல வேண்டும்! ஏனெனில், இவர்களா லெல்லாம் உண்டாகும் அநுகூலம் அல்லது சுகம் உனக்கே இருப்பதால்தான் உனக்கு அவர்கள் மேல் பிரிய முண்டாகிறது. இவர்களால் (அல்லது இவைகளால்) மற்றவர்களுக்குத் தான் அநுகூலம் என்றும், உனக்கு ஒன்றுமில்லை யென்றும் ஏதாவது உணர நேர்ந்தால் உடனே அவைகளின்மேல்

